# ஆன்மீக எழுச்சியும் வள்ளலாரும்

— நாடகம்

டாக்டர் விருப்பாட்சி

அ. ராமகிருஷ்ணன் M.A.,M.Ed.,D.G.T.,

திருமுருகன் பதிப்பகம்

பாலசமுத்திரம், பழனி, தமிழ்நாடு.

This book is published with Financial assistance for Religious Publications of Thirumala Tirupati Devasthanams under their Aid to Authors Scheme'.

**The author of the book is alone liable for any legal action at his own risk and responsiblity in case of disputs or criticism if any, arises about the book.**

---


## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | : | **Anmeega Ezhichiyum Vallalarum** |
| Author | : | **Dr. A. Ramakrishnan,** M.A., M.Ed., D.G.T., |
| Publisher | : | **Thiru Murugan Pathippagam,** 30, Bazaar Street, Balasamudram (P.O), Palani Taluk. 624 610. |
| Lauguage | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | September 2007 |
| Paper used | : | Maplitho 18.6 kg. |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 point |
| No. of Pages | : | 106 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs.40/- |
| Printed by | : | **Modern Offset Printers,** 52, Anna Nagar, Palani - 624 610. Tamil Nadu. |
| Subject | : | **Critis on how a layman could raise himself to the spiritual supreme.** |

# அணிந்துரை



*காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை உள்ள ஒட்டு மொத்த படைப்பாளர்களின் இயக்கமான பொற்றாமரை இயக்கத்தின் தலைவர், சிறந்த இலக்கியவாதி, அரசியல் தலைவர்,*

**திரு. இல. கணேசன்**

ஒரு அரிய கருத்தை அதிக மக்கள் உணரும்படி செய்வதே உகந்தது. வேதங்களின் கருத்தை உபநிஷத்துக்கள் விளக்குகின்றன. அவைகள் அதனால் மனதில் பதிகின்றன.

தவத்திரு இராமலிங்க வள்ளலார் அவர்களது வாழ்க்கை சம்பவங்களையும், தத்துவங்களையும் நாடக வடிவில் தந்து பாமரர்களும் புரிந்து கொள்ளும்படி ஆக்கியுள்ள விருப்பாட்சி ராமகிருஷ்ணன் பாராட்டுக்குரியவர்.

வள்ளலாரது வாழ்க்கையை அறிந்து அதை நாடக வடிவில் தருவதே அரிது. ஆனால் அவரது கருத்துக்களை, தத்துவங்களை புரிந்து அதை எளிமையாக்கித் தருவது அரிதினும் அரிது. அதை நாடகாசிரியர் நன்றாக செய்துள்ளார்.

எனது பெற்றோருக்கு மொத்தம் ஒன்பது குழந்தைகள். நான் சொல்வதுண்டு. நகைச்சுவையாக, ஆசிரியர் இதே கருத்தை சொல்லியுள்ளார்.

பல இடங்களில் வரும் நகைச்சுவைக் கருத்துக்கள் சிந்தனையை தூண்டும் வகையில் நாடகத்தின் ஓட்டத்தை சுவைபடச் செய்கின்றன. ஓட்டல், கிளப்பு ஆகியவை உதாரணத்திற்கு ஒன்று.

இது ஒரு நல்ல முயற்சி. உடல் நலத்துக்கான மருந்தினை தேனில் குழைத்து தரும் நல்ல முயற்சி.

ஆசிரியருக்கு எனது வாழ்த்துக்கள்; பாராட்டுக்கள்.

அருட்பெருஞ் சோதி! தனிப்பெருங் கருணை!

(இல. கணேசன்)

## அணிந்துரை



கவிதை சித்தர், கலைமாமணி

### டாக்டர். பழனி இளங்கம்பன்

டிலிட்.,

"ஆன்மீக எழுச்சியும் வள்ளலாரும் என்ற அருமையான நாடக நூலை சிறந்த கவிஞரும் நல்ல சமூக சிந்தனையாளருமான விருப்பாட்சி. இராமகிருஷ்ணன் ஆக்கியுள்ளார்.

படிக்கவும், நடிக்கவும் நல்ல நாடக நூ-து. நல்ல கருத்துள்ள ஆன்மீக எழுச்சியை நாட்ட வல்ல இந்த நாடகம் தமிழில் நல்ல நாடகங்கள் உருவாக வில்லை என்னும் குறையை நீக்க வந்த கோலத்திரு நூல் என்று கொள்ளலாம்.

ஆன்மீக எழுச்சி என்பது வள்ளலார் வருகையால் இருந்தே தொடர்கின்றது என்று நான் சொல்லத் தேவையில்லை. நம்முடைய சமுதாயம் இன்று தெளிவான ஆன்மீகப் பாதையில் இயங்குகின்றது என்றால் அதற்கு வள்ளலாரின் வருகையும் ஒரு காரணமாகும்.

சமயங்கள் நல்-ணக்கத்தை மறந்து மோதிக் கொண்டிருந்த காலத்தில் இறைவனால் அனுப்பப் பெற்றவராகவே நாம் கருதுகின்றவர் வள்ளல் பெருமானே ஆவார்.

தன் வருகையைப் பற்றி அவரே சொல்லும் போது இவ்வரிய அருட்பாவாக அது இலங்குகின்றது.

அகத்தே கறுத்து புறத்து வெளுத்திருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்கச் சங்கத்து அடைவித்திட வரும்
இகத்தே பரத்தை பெற்று மகிழ்ந்திடுதற்கென்றே எனை இந்த
யுகத்தே இறைவன் வருவிக்க உற்றேன் அருளைப் பெற்றேனே

என்று கூறுகின்ற வள்ளலார் அவர்களின் வாழ்க்கை சித்தரியல் சீர்மையில் இருந்து நிற்கும் வாழ்க்கை. விந்தைகளில் விந்தையாக அமைந்த வாழ்க்கை.

அதனைப் படித்தும் கேட்டும், அறிவதைவிட இத்தகைய நாடகத்தால் மக்கள், நன்கு அறிந்து கொள்ள முடியும்.

வள்ளலார் வாழ்வின் நிகழ்ச்சிகளில் எல்லாம் நாம் இறையருளும் இறைமணமும் கலந்து நின்றால் ஆன்மீகத்தில் பேரொளியை காண முடியும். இந்த நாடகத்தில் அத்தகைய சம்பவங்கள் மிக மிக எளிமையான முறையில் விளக்கப்பட்டு உள்ளன.

வாழ்க்கை என்பது வார்த்தைகளால் விளக்கப்படுதல்ல. வாழ்க்கையை வாழும் வாழ்க்கையால் வாழ் முறையில் விளக்கப்பட வேண்டும் என்பதற்காகவே வள்ளற் பெருமான், கோலத்தாலும் கொள்கைகளாலும் தன் வாழ்க்கையை மிக மிக எளிமையாகவே கொண்டிருந்தார். அந்த வாழ்க்கையை இந்த நாடகத்தின் மூலம் கவிஞரும் எழுத்தாளருமான விருப்பாட்சி இராமகிருஷ்ணன் அவர்கள் உயர்ந்த முறையில் அருட்பாவின் ஆன்மீக கருத்தை எல்லாம் காட்சிகளாகக் கண் முன் கொண்டு வந்து நிறுத்துகின்றார்.

இருபத்து ஆறு காட்சிகள் நிறைந்த இந்த நாடகத்தில் கற்பனைப் பாத்திரங்களுடன் இராம-ங்கரையும் ஓர் பாத்திரமாக்கி அவர் வழியாகவே பல கருத்துக்கள் வெளிப்படும் வண்ணம் செய்திருக்கின்றார்.

எளிய நடையில் மக்கள் தமிழில் இந்தப் பாத்திரங்களின் உரையாடல்கள் அமைந்திருப்பது குறிப்பிடதக்கதாகும்.

காட்சி 13-ல் இராம-ங்கருக்கும் சபாபதி என்ற பாத்திரத்திற்கும் இடையே நடை பெறுகின்ற உரையாட-ல் நாம் வள்ளலாரின் இறையியல் தத்துவம் மிகவும் எளிமையாக விளக்கப்படுவதைக் காணுகின்றோம்.

அரிய, அழகிய, அருட்பாவில் அவர்தம் கருத்துக்களை எல்லாம் அவரே உரை நடையில் எளிமையாகச் சொல்வது போல அமைந்திருக்கும் பாங்கை நாம் நன்கறிய முடிகின்றது.

தமிழ் நாட்டு ஆன்மீகத் துறையில் ஓர் எழுச்சியும், ஒளியும் ஏற்பட காரணமாக இருந்த வள்ளற் பெருமானின் வாழ்க்கை இந்த நாடகத்தில் மிக மிக எளிமையாக விளக்கப்பட்டுள்ளது.

கற்பனையான பாத்திரப்படைப்பில் உண்மையான வரலாற்றுச் சம்பவங்களில் மிகவும் சுவையாகவே நாடகம் பின்னப்பட்டுள்ளது. காட்சிக்குக் காட்சி இயல்பான ஓர் விறுவிறுப்பு நாடகத்தைப்படிக்கத் தூண்டுகின்றது.

இந்த நாடகம் மேடைகளில் நடிக்கப்படும் போது, சன்மார்க்க ஆன்மீகம் நிச்சயம் மக்கள் மனதில் புகும், என்பதைச் சொல்லத் தேவையில்லை.

நிகழ்ச்சி இணைப்பு. நேரிய உரையாடல்கள் சமூகச் சூழ்நிலை இவைகளைத் தெளிவாகக் காட்டும் நாடகத்தை நாடக ஆசிரியர் விருப்பாட்சி இராம கிருஷ்ணன் அவர்கள் சிறப்பாக ஆக்கியுள்ளார்.

அரிய உழைப்பில் அருட்பாவில் கருத்தை எல்லாம் ஆழ்ந்தறிந்து அவைகளையே சம்பவங்களாக்கி உள்ளார். இதுவே இந்த நாடகத்திற்குத் தனிவெற்றியாக அமைந்துள்ளது.

வள்ளற் பெருமானின் சங்கம், சபை, சாலை என்ற முப்பிரிவின் வழிகாட்டி நெறிமுறைகள் அவரை உலகிற்கு இனம் காட்டியது. ஆன்மீகத்திற்கு தெளிவைத் தந்தது. இந்த நாடகத்தில் அவைகள் கண்ணுக்கு வாய்ந்த காட்சிகளாக அமைந்துவிட்டன.

நடிக்கப் பயன்படும் இந்த நாடகம் படிக்கவும் பயன்தரும். நாடக உத்திகளிலும் இந்த நாடகம் சிறந்து விளக்கும் வண்ணம் ஆக்கப்பட்டுள்ளதைப் பாராட்டுகின்றேன்.

*சித்ர கூடம், பழனி.*

## அணிந்துரை



முனைவர்.
**இரத்தின. கிருட்டிணமூர்த்தி**
எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி.,
மேனாள் பேராசிரியர் - தலைவர்,
தமிழியல் துறை - உயராய்வு மையம்,
அருள்மிகு பழனியாண்டவர் கலை-பண்பாட்டுக் கல்லூரி,
பழனி - 624 601.

டாக்டர். ஏ. இராமகிருஷ்ணன் எம்.ஏ.டி.ஜி. டி, எம் எட்., அவர்கள் எழுதிய "ஆன்மீக எழுச்சியும் வள்ளலாரும்" என்னும் பெயரில் உள்ள நாடகப் படைப்பைக் கண்ணுற்றேன்.

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி என்னும் அரியதோர் மந்திர மொழியை வழங்கிய வள்ளல் இராமலிங்க சுவாமிகள் வாழ்வைப் படம்பிடித்துக் காட்டுகிறது நண்பர் எழுதியுள்ள நாடகம். முத்தமிழில் நாடகத்தமிழ் பயிலுதற்கும் நடிப்பதற்கும் ஏற்றவகையில் அமைவதுண்டு. தமிழில் நாடகங்கள் அரிதாகவே உள்ளன. நாடக நூல்களின் வரவு இயற்றமிழ், இசைத்தமிழ் இவற்றை நோக்கும் பொழுது மிகக் குறைவாக உள்ளது. பெரும்பாலும் நடிப்பதற்கென எழுதப் பெறும் நாடகங்களில் பாத்திரங்களின் உரையாடல் பேச்சு வழக்குத் தமிழ் இடம் பெறுவதைத் தவிர்ப்பதற்கு வாய்ப்பில்லை.

திரு. இராமகிருஷ்ணன் தமது படைப்பில் உரையாடல்களை நல்ல முறையில் அமைத்துள்ளார். வள்ளலார் அருளிய சமரச சன்மார்க்கத்தை, இருபத்தாறு காட்சிகளில் அமைந்துள்ள நாடகத்தில், தெள்ளத் தெளிவாக அனைவரும் அறிந்துகொள்ளும் வகையில் வெளிப்படுத்தியுள்ளமைக்குத் தமிழகம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. நாடகப் போக்கின் இடையிடையே நகைச்சுவையூட்டும் திறத்தில் பாத்திரங்களை உலவவிடும் ஆசிரியரைப் பாராட்டுகிறேன்.

நடித்துக் காட்டுதற்கேற்ற வகையில் நாடகம் உருப்பெற்றுள்ளதை எண்ணிப் பெருமகிழ் வெய்துகிறேன். எனது நண்பர் பொள்ளாச்சி – கவிஞர் பாசி அவர்களின் "வள்ளலார் பிள்ளைத்தமிழ்" என்ற நூலுக்கு அணிந்துரை எழுதியுள்ள எனக்கு நண்பர். டாக்டர். இராமகிருஷ்ணன் அவர்கள் வள்ளலாரை மையப்பொருளாக வைத்து எழுதியுள்ள நாடகத்திற்கு இந்த அணிந்துரையை எழுதிடும் வாய்ப்புக் கிடைத்ததை எண்ணிப்பேருவகையடைகிறேன். இராமகிருஷ்ணன் இராம–ங்கத்தைப் போற்றும் திறத்தில் ஓர் அரிய நாடகப்படைப்பை இயற்றியுள்ளமை பொருத்தமே என எண்ணுகிறேன். "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று நவின்ற புறநானூற்றுப் புலவன் கணியன் பூங்குன்றன் மொழிக்கு ஓர் ஒப்பற்ற விளக்கமாக – அருட்பேரொளியாகத் திகழ்ந்த வடலூர் அருட்பிரகாச வள்ளலாரின் பெரு நெறியாம் சமரச சன்மார்க்க நெறி போற்றப் பெற்றால் இன்றைய உலகில் அமைதி நிலவும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. டாக்டர். இராமகிருஷ்ணனின் அரிய தொண்டினைப் பாராட்டுகிறேன். நெஞ்சார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவிப்பதுடன் மேன்மேலும் நாடகத்துறையின் வளர்ச்சிக்கான நூல்களை வழங்கிடுமாறு வேண்டிக்கொள்கிறேன்.

தாயகம்,
36, சண்முகபுரம்,
பழனி – 624 601.
25–8–07.

அன்புடன்,

(இரத்தின. கிருட்டிணமூர்த்தி)

## மதிப்புரை




**Dr. S. PALANICHAMY** M.Sc., Ph.D.,

Professor & Head (Rtd.), Zoology Dept.
A.P.A.College, PALANI.

Formerly, Principal,
Ayiravysiar College, MADURAI.

**Editor-in-chief,**
*Journal of Ecobiology & Journal of Ecotoxicology and Environmental Monitoring*
*Prop. Modern Offset Printers*


கவிஞர் டாக்டர் .ஆ. ராமகிருஷ்ணன் அவர்கள் எழுதியுள்ள **ஆன்மீக எழுச்சியும் வள்ளலாரும்** என்ற நாடகத்தைப் படிக்கும் போது நூலாசிரியரின் பன்முகத் திறன் வெளிப்படுகிறது. பல கதாபாத்திரங்களைப் படைத்து, அவர்களில் ஒருவராக இராமலிங்க அடிகளாரை சித்தரித்து, அவரது வாழ்க்கை வரலாற்றையும் ஆன்மீக நெறிகளையும், மனித இயல் புகழையும் பேச்சுத் தமிழில் நகைச்சுவை கலந்த அன்றாட வாழ்க்கைச் சம்பவங்களாக சித்தரித்து இந்நாடகம் விளங்குகிறது. இருபத்தாறு காட்சிகளாக அமையப் பெற்ற இந்நாடகத்தின் மூலம் எல்லோரும் எளிதில் அறநெறிக் கருத்துக்களைப் புரிந்து கொள்ள முடியும்.

ஒவ்வொரு விலங்கிற்கும் ஒரு குணமுண்டு; அக்குணத்தை வைத்து மனிதர்களையும் ஒப்பிடுவதுண்டு. இந்நாடகத்தில் ஒரு சிவயோகி, பலதரப்பட்ட மனிதர்களைப் பார்த்து மாடு, நரி, கழுதை, பன்றி என்று அழைக்கிறார். அதே வேளையில் அன்பு, எளிமை, தன்னடக்கம், பணிவு, பிறருக்கு உதவுதல், தன் குற்றங்களை தானே உணர்தல் முதலியவைகளைக் குறிப்பால் அறிந்த சிவயோகி, ராமலிங்கத்தைக் கண்ணுற்று உண்மையான மனிதன் என்று குறிப்பிடுகிறார். யாவருக்கும் தீங்கு செய்வோர் மிருகமாகவும், தீங்கு செய்யாதோர் மனிதனாகவும் யாவருக்கும் உதவோர் தெய்வமாகவும் மதிக்கப்படுகிறார். காட்சிகள் இடையே ஆங்காங்கே எடுத்தாளப்படும் நாடக ஆசிரியர் மற்றும் ராமலிங்க அடிகளாரின் பாடல்கள் இறையியல் மற்றும் வாழ்க்கை இயல்புகளை வலியுறுத்துகின்றன. 'என்னை விட்டு உயர்ந்தால், என்னை நீ மதிக்கமாட்டாய்'

என்ற மனித சுயகௌரவமும், "மண்ணை விட பொரு உயர்ந்தால். மண்ணே மதிக்குதம்மா" என்ற தொடர் உயிரற்ற பொருளே பெருமை கொள்கிறது என்பதில் சில மனிதரது சுயமை புலனாகிறது. பெரு வெற்றியடைய நினைக்கும் ஒருவன் தன்னையாண்டு உத்தமனாய் இருக்க வேண்டும். குடும்ப வாழ்க்கையில் இறைவன் நினைப்பில் வாழ்ந்து காட்டுவதே இறைநெறி.

கோயில்களில் ஆடு, கோழிகளை பலியிடக் கூடாது, உயிர்களிடத்தில் அன்பு செலுத்த வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்த நூலாசிரியர் ஒரு காட்சியை அமைத்து, கோயில்களில் உள்ள பலிபீடத்திற்குரிய காரணத்தை விளக்குகிறார். திருட்டு, பொறாமை, சண்டை போன்ற கெட்ட குணங்களை பலிபீடத்தில் பலியிட்டுவிட்டு, கோயிலுக்குச் செல்ல வேண்டும் என்ற கருத்து ராமலிங்க அடிகளார் மூலம் உரையாடலாகவும் பாடலாகவும் மிளிர்கிறது:

மண்ணுக்கே இரையாகும் மனிதர்களே பாருங்க
மத்த உயிரைக் கொன்னா என்னவரும் கூறுங்க
செத்த உடல் அது பொணம்தானே உண்மைங்க
பொணத்தைத் திண்ணும் பாவிகளே நீங்க...

இராமலிங்க சுவாமிகள் உருவ வழிபாட்டினை தவிர்த்து, ஒளி (ஜோதி) வழிபாட்டினை படிப்படியாய் கொண்டு வர முனைந்தவர். அதே வேளையில் உருவமில்லா வழிபாட்டில் இருக்கும் சிரமங்களை உணர்ந்து. உருவ வழிபாட்டின் மூலம் இறையியல் மேம்பட முனைந்தவர். இக்கருத்தை நாடகக் காட்சி வாயிலாக தெய்வத்திற்குப் பயந்து, ஒழுக்கமாக நற்பணி, அன்னதானம் முதலிய அறநெறியான காரியங்களைச் செய்வது நன்றே என்று விளக்குகிறார்.

பல கற்பனைப் பாத்திரங்களைப் படைத்து, வள்ளலாரின் வரலாற்றைப் புகுத்தி, அவரின் ஆன்மீக நெறிகளை இணைத்து நாடகக் காட்சிகளாகத் தொகுத்து, நாடகம் விருவிருப்பாக நடக்க நகைச்சுவை உணர்வுகளையும் சேர்த்து இந்நூலை வழங்கிய கவிஞர் டாக்டர் அ. ராமகிருஷ்ணன் அவர்களுக்கு எனது பாராட்டுக்கள்; வாழ்த்துக்கள்!

அன்புடன்,

# முன்னுரை

இன்றைய அவசர உலகத்திலே, ஆவேச நடைமுறைகளிலே, எங்கு பார்த்தாலும் ஆடம்பரம், படாடோபம், பதவி மோகம் தலைவிரிந்தாடுகிறது. ஆளுக்கொரு கொள்கை, ஆளுக்கொரு கட்சி, அதற்காக கூச்சல், குழப்பம், வெட்டு, குத்து, கண்ணிவெடி, பெரிய வெடி என்று நாட்டையே கலக்கிக் கொண்டிருக்கும் சூழ்நிலையிலே இதற்கு தீர்வுதான் என்ன என்று சிந்திக்கின்ற நேரம் வந்துவிட்டது.

புதிதான சிந்தனை வேண்டியதில்லை; பழைய சிந்தனையாளர்களின் சிந்தனைகளை நாம் திரும்பப் பார்த்தாலே போதும்.

மக்களின் துன்பம் கண்டு துன்பப்பட்டவர்கள் பலர். அவர்களில் வாடிய பயிரைக் கூட கண்டு துன்பப்பட்டவர்கள் ஒருவர். அவர்தான் வள்ளலார் என்ற ராமலிங்க சுவாமிகள்.

சாதாரண நிலையிலே கோவில்களுக்குச் சென்று கோவில்களிலே இருக்கும் மூலவர்களைப் பாடி பக்தியைப் பரப்பி மக்களுக்குள் ஆன்மீக எழுச்சியை ஏற்படுத்தியவர் வள்ளலார்.

புகைவண்டி இஞ்சின் முன்னேறி முன்னேறிச் செல்ல செல்ல, பின்னால் உள்ள வண்டிகளையெல்லாம் இழுத்துக் கொண்டே போவது போல, இவர் ஆன்மீகத்திலே படிப்படியாக முன்னேறி எழுச்சி பெற்று இறைவனை ஜோதிமயமாக தரிசிக்கும் நிலை பெற்று மற்றவர்களையும் அந்த நிலைக்கு படிப்படியாக இட்டுச் சென்றார்.

திருமணம் செய்தும் நைஷ்டிக பிரம்மச்சாரியாக வாழ்ந்தவர், கையுற வீசி நடக்கவும் நாணி கைகளைக் கட்டியே நடந்தவர், மெய்யுறக் காட்ட வெறுவி, வெண்துகிலால் மெய்யெலாம் மறைத்துக் கொண்டே இருந்தவர். அடக்கத்தின் மேருவாகத் திகழ்ந்தவர்.

வள்ளலாரின் வாழ்க்கையின் ஒவ்வொரு கோணமும் உலகோர்க்கு பாடமாக அமைகின்றது. அவரின் பேச்சின் ஒவ்வொரு வார்த்தையும் தத்துவ விளக்கங்களாக மிளிர்கின்றது.

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழாலும் இவர் வாழ்க்கையை எடுத்தோதலாம். இயல் பேசினால் கேட்கும் கூட்டத்தைவிட இசையில் பாடினால் அதிக கூட்டம் வரும். இசையில் பாடினால் வரும் கூட்டத்தைவிட நாடகத்தின் மூலம் நடித்துக் காட்டினால் இன்னும் ஏராளமானோர் பார்த்துக் கேட்டு மகிழ்வார்கள்.

எனவே பெருமுயற்சி எடுத்து ஏழுமலையானின் திருவருளாலும் அவரின் மருமகன் பழனி முருகனின் அருட்கடாட்சத்தினாலும் சுவைபடகட்டி இந்த நாடக நூலை எழுதியுள்ளேன்.

இந்த நூலை திருப்பதி திருமலா தேவஸ்தானம் தன்னுடைய அறிஞர்கள் குழுவால் ஆய்ந்து மதிப்பீடு செய்து தக்கதென்று ஏற்று, நிதியளித்து நூலாக அச்சில் கொண்டுவந்துள்ளனர். அதற்காக திருப்பதி திருமலா தேவஸ்தானத்திற்கு நான் நன்றிக் கடன் பட்டுள்ளேன்.

பாரதீய ஜனதா கட்சியின் தமிழ் மாநில தலைவர் திருமிகு. இல. கணேசன் அவர்கள் ஒரு தலைசிறந்த இலக்கியவாதி என்ற முறையிலும் காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை உள்ள இலக்கியப் படைப்பாளிகளின் அமைப்பான பொற்றாமரை இயக்கத்தின் தலைவர் என்ற முறையிலும் இந்த நாடகத்துக்கு மதிப்புரை நல்கி உள்ளார்கள். ஏராளமான அரசியல் பணிகளுக்கிடையிலும் நாடகத்தை முழுவதும் படித்துப் பார்த்து ஆசி வழங்கிய அவர்களுக்கு மிகுந்த நன்றி செலுத்துகிறேன்.

இந்தியா முழுவதுமன்றி வெளிநாடுகளிலும் புகழ் பரப்பி வரும் மாபெரும் எழுத்தாளர் கலைமாமணி டாக்டர். இளங்கம்பன் அவர்கள் மதிப்புரை நல்கியதற்காக நன்றி செலுத்துகின்றேன்.

தமிழ்த்துறை – ஆய்வு மைய தலைவர் பேராசிரியர் டாக்டர். இரத்தின கிருட்டிணமூர்த்தி அவர்கள் மதிப்புரையும், பாராட்டுரையும் வழங்கியதற்காக அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இன்றைய படைப்பாளிகளுக்கு ஊக்கம் கொடுத்து அவர்களின் படைப்புகள் வெளிக்கொணர பெரிதும் காரணமாக இருந்து எல்லா வகைகளிலும் பேருதவி புரிந்து பழனிக்குப் புகழ் சேர்க்கும் பெருமகனார் பேராசிரியர். டாக்டர். பழனிச்சாமி அவர்கள் மதிப்புரை, நல்கி பாராட்டி உள்ளமைக்கு இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூ–லை சிறந்த முறையில் அச்சில் அமைத்துக் கொடுத்து, எல்லோரும் பழனியில் இப்படி ஒரு அச்சகம் இருக்கிறதா என்று வியந்து வினா எழுப்பி பாராட்டும் வண்ணம் இருக்கிற பழனி மாடர்ன் ஆப்செட் அச்சகத்தாருக்கும் அதன் உரிமையாளர் பேராசிரியர். டாக்டர். பழனிச்சாமி அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த நாடு நம் அகம் எனும் சிந்தனை நம்மனதில் பொ–வேற இந்த நாடகம் உதவட்டும்.

இந்த நாடகம் நாடு + அகம் = நாடகம் என்று ஆகட்டும்.

அன்பன்,

விருப்பாட்சி அ. ராமகிருஷ்ணன்

# ஆன்மீக எழுச்சியும் வள்ளலாரும் – நாடகம்

## காட்சி - 1

மேடையில் சிலர் அமர்ந்திருக்கின்றனர். ஒருவர் எழுந்துவந்து பாடுகின்றார்.

பாடுகிறவர் :

“ கோடையிலே இளைப்பாறிக் கொள்ளும் வகை கிடைத்த
குளிர் தருவே தருநிழலே நிழல் கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரே •
உகந்த தண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே
மென்காற்றின் விளை சுகமே சுகத்தில் ஊறும் பயனே
ஆடையிலே எனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசே என் அலங்கல் அணிந்தருளே! ”

கொஞ்சம் அமைதியா இருங்க, ஐயா உங்களைத்தானே... கொஞ்சம் சத்தம் போடாதீங்க...

பேரறிஞர்களே! தமிழார்வம் கொண்டோரே! சிறந்தோரே! இத்தனை நாட்களும் இந்த மேடையில் பெரியபுராணச் சொற்பொழிவு தங்குதடையின்றி நடைபெற்றது. தினமும் அற்புதமாகச் சொற்பொழிவு நிகழ்த்திவரும் சபாபதி பிள்ளை அவர்களுக்கு உடல்நலமில்லை என்று கேள்விப்படுகிறோம். அவரை எப்படியாவது கூட்டிவந்து இன்றைக்கு இரண்டு பாட்டு மட்டுமாவது பாடச் சொல்லலாம் என்பதற்காக அவர் வீட்டுக்கு கணக்குப்பிள்ளை ஐயா போயிருக்கிறார். கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள்...

(கசமுசா என்று முனகல் சத்தம் கேட்கிறது) என்ன ஏதோ சப்தம்...?

கந்தசாமி : இல்லீங்க இன்னைக்கு இந்த நிகழ்ச்சியை ரத்துச் செய்திடலாமுங்க. பின்னால சுப்பையா பிள்ளை உடம்பு நல்லா ஆன உடனே தொடர்ச்சியை வைச்சுக்கலாமுங்க. (அப்போது ஒரு பையன் வருகிறான்) டேய் பையா... கொஞ்சம் தள்ளி நில்ரா தம்பி!

பையன் : மன்னிக்கனும்! என்னை என் அண்ணன் சபாபதி பிள்ளை இங்க அனுப்பிச்சு வைச்சாருங்க. இங்க சோமு செட்டியார் ஐயாவைப் பார்க்கனும்...

கந்தசாமி : தம்பி இவருதான் சோமு செட்டியார் ஐயா... (கையைக் காட்டுகிறார்)

பையன் (ராமலிங்கம்) : ஐயா வணக்கம்! நான் சபாபதி பிள்ளையின் தம்பி. அண்ணனுக்கு உடம்பு சௌகரியம் இல்லாததுனால என்னை அனுப்பி வைச்சார்...

சோமு செட்டியார் : பரவாயில்லை தம்பி! நிகழ்ச்சியை இன்னொரு நாளைக்கு வச்சுக்குறோம்...

பையன் (ராமலிங்கம்) : இல்லீங்க ஐயா... என்னை அவருக்குப் பதிலா சொற்பொழிவு செய்ய சொல்லி அனுப்பிச்சார்...

கந்தசாமி : என்னங்க பையன் விளையாடறான்...

முத்து : அதுதானே! பத்து பிள்ளை பெத்தவளுக்கு ஒரு பிள்ளை கூட பெக்காதவ மருத்துவம் பாத்த கதை மாதிரியில்ல இருக்கு...

சோமு : கொஞ்சம் பொறுங்க... அனுப்பி வைச்சவர் நம்ம சபாபதிபிள்ளை, சும்மா காரணம் இல்லாம அனுப்பி வைச்சிருக்க மாட்டார். பையன் என்னதான் சொல்றான்னு கொஞ்ச நேரத்துக்கு

கேட்டுப் பார்க்கலாமே... தம்பி இங்கே வா! இப்படி உட்கார்ந்து பேசு... (பையன் வந்து அமருகிறான்)

பையன் (ராமலிங்கம்) : இன்னைக்கு என்ன தலைப்புல பேசணும் ஐயா!

சோமு : இன்னைக்கு திருஞான சம்பந்தர் பத்தி பேசணும் தம்பி.... உனக்கு அதெல்லாம் புடிபடாது தம்பி. ஏதாவது ஒரு பாட்டு பாடத் தெரிந்தா பாடிட்டுப் போ... வந்ததுக்கு... நாங்கள்லாம் சும்மா போகாம ஒரு பாட்டாவது கேட்ட மாதிரி இருக்கட்டும்.

பையன் (ராமலிங்கம்) : ஐயா, நான் திருஞான சம்பந்தர் தலைப்பிலேயே பேசறேன்... அனுமதி கொடுங்க...

சோமு : தலைப்பிலேயே பேசறியா...? பரவாயில்லையே... சரி பேசு தம்பி பார்க்கலாம்...

கந்தசாமி : (முத்துவைப் பார்த்து) முத்து இந்த அறுவையெல்லாம் என்னால கேட்டுகிட்டிருக்க முடியாது... வா வெளியே போகலாம்...

முத்து : அடச் சும்மா இருப்பா எந்தப் புத்துல எந்தப் பாம்பு இருக்குமோ... என்னத்தைத் தான், பையன் சொல்றான்னு கேட்கலாமே...

கந்தசாமி : முத்து, நீயே இந்தப் புத்துல கையை விட்டுப் பாம்பைப் பிடி... நான் வெளியே நிக்கறேன்... என்னை ஆளை விடப்பா...

(ராமலிங்கம் பாட ஆரம்பிக்கிறான்)

ராமலிங்கம் : தோடுடைய செவியன் விடை யேறியோர் தூவெண் மதிசூடிக் காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளம்கவர் கள்வன்...

கந்தசாமி : அப்பா சாமி ஆளை விட்ருடா நான் வெளியே ஒடிப் போறேன்... (வெளியே ஓடுகிறார்)

முத்து : நேத்து எங்க பக்கத்து வீட்டுக்காரரு குடிச்சா உடம்பு கெட்டுடும்னு புத்தகத்துல போட்டிருந்துச்சு அதனால விட்டுட்டேன்னார். குடிக்கிறதை விட்டுட்டீங்களா பலே! ன்னு சொன்னேன். அதுக்கு அவர் "இல்லீங்க, இந்தமாதிரி புத்தகம் படிக்கிறதையே விட்டுட்டேன்னார் அதுமாதிரி இல்லே இருக்குது இந்த கந்தசாமி சொல்லிட்டு ஓடிப்போறது...!

## காட்சி - 2

(கந்தசாமி தன் கண்ணில் விழுந்த தூசியை எடுத்துவிட்டு அகலமாக விழித்துப் பார்க்கிறார் முத்து வருகிறார்)

முத்து : ஏப்பா கந்தசாமி திருட்டு ஆட்டு முழி முழிக்கிறே

கந்தசாமி : என்ன சொன்னே...?

முத்து : திருட்டு ஆட்டு முழி முழிக்கிறேன்னேன்.

கந்தசாமி : ஏப்பா ஆட்டை நீங்க திருடினா ஆட்டுக்கு திருட்டு ஆடுன்னு பேரு வைச்சுக்கிறதா... அட திருட்டு மனுசா.. சாராயத்தை கள்ளத்தனமா மனுசன் காச்சுனா அந்த சாராயத்துக்குப் பேரு கள்ளச்சாராயமுங்கறீங்க... வரியை ஏமாத்தறதுக்காக கருப்பு மனத்தோட பணத்தை பதுக்கினா அந்தப் பணத்துக்குப் பேரு கருப்புப் பணமுங்கிறீங்க. ரயில்ல திருட்டுத்தனமா வந்துட்டு திருட்டுரயில் ஏறி வந்தமுங்கறீங்க

ரயிலா திருட்டுரயில்? ஒங்க தப்பையெல்லாம் அடுத்தவங்க மேல போட்டே பழக்கப் பட்டுட்டீங்க...

முத்து : என்ன கந்தசாமி நாம நடந்து போறப்ப ஒரு கல்லு மேல நம்ம காலு அடிச்சதுனா கல்லு பலமா மோதிடிச்சுனு சொல்றோமில்லே கல்லா உன் காலை மோதிச்சு? உன் கால் இல்லே கல்லு மேலே மோதிச்சு. அதுமாதிரித்தான்...

கந்தசாமி : அதுதான் எப்பவுமே மனுசன் அடுத்தவங்க மேலேயே பழியைப் போடறது பழக்கமாய் போச்சு...

முத்து : நீ இவ்வளவு நியாயம் பேசிறியே... நேத்து அந்த பையன் பாட ஆரம்பிச்ச உடனே ஓடிப் போயிட்டியே... உனக்கு புரியலைலா அறுவைனு சொல்லிடறதா...?

கந்தசாமி : பத்துப் பிள்ளை பெத்தவளுக்கு ஒருபிள்ளை கூட பெக்காதவ மருத்துவம் பாத்த மாதிரியில்ல இருக்குது...!

முத்து : நேத்து சொன்ன அதே உதாரணத்தை இன்னிக்கும் சொல்ற பாரு... ஆஸ்பத்திரிகள்ல டாக்டர் ஒருபிள்ளை கூட பெக்காட்டியும் பத்துபிள்ளை பெத்தவளுக்கு மருத்துவம் பாக்குறது இல்லையா..? அதுபோல இந்தப் பையன் பேச்சை நீ கேட்டிருந்தா இப்படிச் சொல்லிருக்க மாட்டே...

கந்தசாமி : அப்படியா...?

முத்து : அப்படியாவா...? சின்னப் பையனா அவன்? என்னமா தேனொழுகப் பாடறான், என்னமா அர்த்தம் சொல்றான், சாட்சாத் சரசுவதிதேவியே அவன் நாக்கிலே நர்த்தனம் ஆடின மாதிரியல்ல இருந்துச்சு...!

கந்தசாமி : என்னப்பா நிஜம்மாவா...?

முத்து : நிஜமாதாம்பா அவன் கதை சொன்னவிதம் பாவனை, ராகம், லயம்... அப்பப்பா பல இடங்களில் உடம்பே புல்லரிச்சுப் போச்சுதப்பா!

கந்தசாமி : அப்படியா...? ஆமா, அந்தப் பையன்... யாருமகன்... தெரியுமா?

முத்து : அட நேத்தே அந்தப் பையன் சொன்னானே... சுப்பையாபிள்ளையின் தம்பி அவங்க அப்பா பேரு மருதூர் ராமையாபிள்ளை.

கந்தசாமி : இவன் கூடப்பிறந்தவங்க எத்தனை பேரு..?

முத்து : அவங்க அப்பாவுக்கு 6–வது மனைவி மூலம் பிறந்த 5–வது பையன் இவன், கூடப்பிறந்த ரெண்டு பொண்ணுகளும் இருக்கு.

கந்தசாமி : இந்தப் பையன் எப்ப பிறந்தான் ?

முத்து : சுபானு வருஷம் புரட்டாசி மாதம் 21–ம் தேதி... இந்தா சும்மா சும்மா குடைஞ்சு குடைஞ்சு கேள்வி மேல கேள்வி கேட்டுக்கிட்டேயிருக்காதே... நேத்து நீ ஓடிப்போனது மாதிரி இப்ப உங்கிட்டேயிருந்து நான் ஓடிப்போயிடுவேன்...

கந்தசாமி : சரிப்பா. இனிமேல கேக்கலை... ஆளைவிடு.

முத்து : ஆமா... அங்கே போறது நம்ம முருகேசன் மகன் கபாலி தானே

கந்தசாமி : ஆமா நம்ம முருகேசனுக்கு ஒரே மகன். ஆனா சுத்த தறுதலைப்பய...

முத்து : ஒரே ஒரு பையன் பிறந்து இப்படி சோடையாப் போயிட்டானே... பல பையன்கள் பிறந்தாலும் இப்படி ராமலிங்கம் மாதிரி புத்திசாலிப் பையனா ஒருத்தன் பிறக்கனும்பா...

கந்தசாமி : ராமலிங்கம் எத்தனாவது பையன்னு சொன்னே..?

முத்து : ராமையாபிள்ளையின் 6–வது மனைவியின் 5–வது பையன்...

கந்தசாமி : அடேயப்பா...! ராமையாபிள்ளை ஒரு பிள்ளை போதுமுனு நினைச்சிருந்தா நம்ம ராமலிங்கம் மாதிரி ஒரு புத்திசாலி கிடைச்சிருப்பானா?

முத்து : அப்போ எல்லோரும் ஒரு பிள்ளை போதுமுனு நிறுத்திட்டா நம்ம முருகேசன் மகன் கபாலி மாதிரி தறுதலைகள் அதிகமாகி நாட்டில் தீவிரவாதம் அதிகமாயிடுமுன்னு சொல்றீ யா...!

கந்தசாமி : நான் அப்படியெல்லாம் சொல்லலையப்பா! நீ வீணாவுல வம்பை இழுத்துவிடப் பாக்குறியே...!

## காட்சி - 3

(கணக்குப்பிள்ளை ராமையாபிள்ளை வெளியே கிளம்புகிறார். மனைவியைக் கூப்பிடுகிறார்)

ராமையா : *சின்னம்மை! சின்னம்மை!*

சின்னம்மை : *இதோ வந்திட்டேங்க*

ராமையா : *நம்ம ரவி கதையைக் கேட்டியா... எங்கிட்ட வந்தான் பாத்து ரொம்ப நாளாச்சுதா... ஏன்டா என்னடா செய்யுறேனு கேட்டேன்.*

சின்னம்மை : *எந்த ரவி...? நம்ம முத்தம்மா மகன் ரவியா...?*

ராமையா : *ஆமா அவனேதான் நான் பட்டணத்துல வைர வியாபாரத்தை தலைகீழாச் செய்யறேன்னு சொன்னான். அடடே நம்ம ஊர்க்காரன் பட்டணத்துல வைர வியாபாரம் செய்யறானா? பரவாயில்லையேன்னு ஆச்சரியப்பட்டேன்.*

சின்னம்மை : *இல்லீங்க... அப்படியொன்றும் வைர வியாபாரம் செய்யலீங்க வேற ஏதோ வியாபாரம்னு சொன்னாங்கங்க...*

ராமையா : *அட நீ அவசரப்படாதே! சொல்றதைக் கேளு. வைர வியாபாரத்தை தலைகீழா செய்யறதாச் சொன்னானா? நான் மோதிரத்துக்கு ஒரு வைரக்கல் என்ன விலையாகும்னு கேட்டேன். அதுக்கு அவன் நான் வைர வியாபாரத்தை தலைகீழானா... ரவை வியாபாரம் செய்யறேனுங்கன்னான்... எப்படி பாத்தியா? அடடே இப்பத்தான் ஞாபகம் வருது நீ ரவை வாங்கி வரச் சொன்னியல்ல...?*

சின்னம்மை : ஆமா நேத்து ரவையில சொன்னேன் இன்னிக்கி பகல்லே ஞாபகம் வருதாக்கும்...

ராமையா : இல்லை சின்னம்மை இப்பவே போய் வாங்கிட்டு வர்ரேன் நமசிவாயம்! (போகிறார். ஒரு சாமியார் வருகிறார்)

சாமியார் : நம.. சிவாயம் ! ந..ம..சி..வா..ய..ம்!

சின்னம்மை : (உள்ளிருந்து) ஏங்க நீங்க இன்னும் போகலையா?

சாமியார் : போகின்ற காலம் இன்னும் வரவில்லை அம்மனி...! (பாடுகிறார்) சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ சாம்ப சிவோம் அரஹரா!

சின்னம்மை : (உள்ளே இருந்து கொண்டே) ஓ, சிவனடியாரா? வாங்க வாங்க இன்னைக்கு யாரும் சிவனடியார் வரலையே சிவனடியார்க்கு சாப்பாடு போடாம எப்படிச் சாப்பிடுறதுனு குறைபட்டுகிட்டு இருந்தேன். சாமி உள்ளே வாங்க... சும்மா உள்ளே வாங்க சாமி.

சாமியார் : இல்லையம்மா நான் இன்னும் சில வீடுகள் பார்க்கனும். எனக்கு ஏதாச்சும் போடுங்க போய்க்கிட்டேயிருப்பேன்.

சின்னம்மை : இல்லைங்க சாமி நீங்க உள்ள வந்து கை கால் அலம்பி திருப்தியா சாப்பிட்டுப் போகனும்.

சாமியார் : ஓம் நமசிவாய! இறைவன் சித்தம் அதுவானால் அப்படியே நடக்கட்டும்... (உள்ளே வருகிறார்) நான் கை கால் எல்லாம் இப்போதுதான் கழுவி வந்தேன் அம்மனி அமுது படையுங்கள்... (சின்னம்மை உணவு போடுகிறார். சாமியார்

சாப்பிடுகிறார்)... அம்மணி இந்த திவ்வியமான அமுதுக்கு இந்த விபூதிதான் என் கைமாறு பெற்றுக் கொள்ளுங்கள்... (விபூதி கொடுக்கிறார்) (சின்னம்மை விபூதி வாங்கி நெற்றியில் அணிந்து வாயில் சிறிது போட்டுக் கொள்கிறாள்)

சின்னம்மை : சாமிகளே, வயிற்றுக்குள் ஏதோ ஒரு உத்வேகமான உணர்வு ஏற்படுதுங்களே!

சாமியார் : அம்மணி, இது இறைவன் செயல்! உனக்கு அந்த ஈசன் கருணையில் அவன் அருளோடு ஒரு அருள் குழந்தை பிறப்பான். மனித குலம் உய்வு பெற பாக்களை அள்ளித் தருவான்... அவன் செயலால் அவன் பிறந்து அவனி வாழும் சிறப்பாக! வருகிறேன்... நமசிவாய! (போகிறார்) (சின்னம்மை மகிழ்ந்து போய் ஒரு மாம்பழத்தை எடுத்துக் கொண்டு அவர் பின்னால் ஓடுகின்றார். சாமியார் மறைந்து விடுகிறார்)

ராமையா : (வந்து கொண்டே) நம..சிவாயம்! (சின்னம்மை திகைத்துப் போய் நிற்பதைக் கண்டு இவர் திகைத்துப் போய் சின்னம்மையை உலுக்குகிறார். சின்னம்மை உணர்வுக்கு வருகிறார்) என்ன சின்னம்மை, கல்லாட்டம் நின்னுட்டே...!

சின்னம்மை : கல் மனுசனாட்டம் வரும் போது, மனுசன் கல்லாட்டம் ஆகிறது இயற்கை தானுங்களே...!

ராமையா : நீ என்ன சொல்ற சின்னம்மை...?

சின்னம்மை : மாமா, இப்ப ஒரு சிவனடியார் வந்தார்... நம்மவீட்ல சாப்பிட்டார்... விபூதி தந்தார் விபூதியை வாயில் போட்டதும் வயிற்றில் ஏதோ ஒரு சக்தி புகுந்தது

போல இருந்தது. சிவனடியார் "உனக்கு ஒரு அருள் குழந்தை பிறப்பான். மானுடம் வாழ அருள் உபதேசம் செய்வான்னார். அவருக்கு கொடுக்கிறதுக்காக இந்த மாம்பழத்தை எடுத்துக்கிட்டு வந்தேன் உடனே அவர் மறைஞ்சிட்டார் அதுதான் திகைத்துப் போய் நிக்கிறேன்.

ராமையா : இறைவன் மனித உருவில் வந்துதான் ஆட்கொள்ளுவான். இறைவன் தன் விஸ்வரூபத்தோட வந்தா மனிதர்கள் பயந்து அரண்டிடுவாங்க. அதனால்தான் மனித உருவில் வர்ரான்.

சின்னம்மை : இறைவன் மனித உருவில் வந்தா இது மனித உருவம் இது தெய்வ உருவம்னு எப்படிக் கண்டுபிடிக்க முடியும் மாமா.

ராமையா : மனித உருவில் இருந்து யாருக்கும் கெடுதல் பண்ணாம இருப்பது முதல்படி, அடுத்தபடியாக அடுத்தவங்களுக்கு ஏற்படுற கஷ்டங்களை தீர்க்கறது ரெண்டாவதுபடி. இந்த ரெண்டாவது படியைச் செய்யறவங்க தெய்வத்தின் வடிவங்கள்தான். அவங்களை நினைச்சுப் பாக்கறதும், வணங்கறதும், இறைவனை நினைச்சுப்பாக்கற மாதிரியும், இறைவனை வணங்கற மாதிரியும்தான்... மனுசங்களோட குற்றங்களை விட்டுட்டாலே அவங்க தெய்வம்தான். மனிதன் மைனஸ் குற்றங்கள் இஸ்ஈகுவல்டு தெய்வம் - குற்றங்களே அணுகாமல் வாழ்றதுங்கறதுதான் தெய்வீகம்!

## காட்சி - 4

(கந்தசாமி உட்கார்ந்து ஒரு பொட்டலத்தைப் பிரித்துச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். முத்து வருகிறார்)

முத்து : என்னப்பா கந்தசாமி என்ன பார்சல் பண்ணி எடுத்திட்டு வந்து சாப்பிடுறே...?

கந்தசாமி : நேத்து டாக்டர்கிட்டே போயிருந்தேன். அடிக்கடி அஜீர்ணக் கோளாறு வருதுனு சொன்னேன். நீங்க இனிமே ஒட்டல்ல சாப்பிடக்கூடாதுனு சொன்னார். அதுனாலதான் ஒட்டல்ல இருந்து பார்சல் வாங்கியாந்து இங்க உட்காந்து சாப்பிடறேன்.

முத்து : அட அறிவாளி! ஒட்டல்ல சாப்பிடக்கூடாதுனு சொல்லியிருப்பார் டாக்டர். உன் குடல்ல புண் இருக்கும் அதுனாலதான் கிளப்புகளிலே காரம் அதிகமாயிருக்குமுனு சொல்லியிருப்பாரு.

கந்தசாமி : ஏன் முத்து ஒட்டலுக்கும் கிளப்புக்கும் என்ன வித்தியாசம்...?

முத்து : ஒட்டல்னா உன்னை இந்த உலகத்தை விட்டே "ஒட்டல்"னு அர்த்தம். கிளப்புனா உன்னை இந்த உலக வாழ்க்கையிலிருந்து, சீக்கிரம் "கிளப்பு"னு அர்த்தம். ரெண்டு அர்த்தமும் ஒன்னுதான்

கந்தசாமி : அப்படி ஒரு அர்த்தமும் இருக்குதா...? நம்ம மைசூர் ஒட்டல் "ஓனர்" முருகேசன்கிட்டே இதைச் சொல்லி கடைப் பேருக்கு பின்னால இப்படி ஒரு அர்த்தம் இருக்குதுனு சொல்றேன்...

முத்து : யோவ்! நான் சும்மா தமாசுக்கு சொன்னேன். நீ ஏதாவது உளறி கிளப்புக் கடைக்காரர்களும் ஓட்டல்காரங்களும் என் மேல கேஸ் கீஸ் போட்டுடப் போறாங்க...!

கந்தசாமி : பட்டினி கிடக்கறதைவிட ஓட்டல்ல சாப்பிடறது பரவாயில்லையப்பா... நேத்து சொற்பொழிவு செஞ்சாரே அந்தப் பையன்கூட சாப்பாடு சாப்பிட வழியில்லாமல் அலைஞ்சதாச் சொன்னாங்க. அவன் கையிலயும் காசு இருந்தா ஓட்டல்ல சாப்பிட்டிருப்பானோ?

முத்து : அதை ஏம்பா கேக்கற. இந்த பையனுக்கு படிப்பு சொல்லிக் கொடுக்கறதுக்கு அவனோட அண்ணன் சுப்பையாபிள்ளை தானே தினமும் எவ்வளவோ முயந்சி செஞ்சு சொல்லிக் கொடுத்தார். இவன் படிக்கற மாதிரி தெரியலை. சுத்த மக்கு இதனால் இவர் ஒரு பெரிய வித்வான் சுப்பையா முதலியார்கிட்டே சேர்த்து படிப்புச் சொல்லிக் கொடுத்தார். (ஒரு கிழவி வருகிறார்)

கிழவி : என்னப்பா சொன்னே? இந்தப் பையன் மக்கா? அருள் குழந்தையப்பா!

கந்தசாமி : என்ன கிழவி சொன்னே...?

கிழவி : ஏய்...! யாரைப் பாத்து கிழவினு சொன்னே...?

கந்தசாமி : பாட்டி உனக்கு 90 வயது இருக்கும் கிழவினு சொன்னா கோபிக்கிறியே...!

கிழவி : நாகரிகமா முன்னாள் குமரினு சொன்னா குறைஞ்சா போயிடுவே...

கந்தசாமி : மன்னிச்சுகுங்க முன்னாள் குமரி அவர்களே! என்னமோ சொல்ல வந்தீங்களே என்ன அது..?

கிழவி : இந்தப் பையன் 5 மாச குழந்தையா இருக்கும் போது ஒரு தடவை சிதம்பரம் தில்லை நடராஜர் கோவிலுக்கு எடுத்துட்டு போயிருந்தாங்க. அப்ப இந்த 5 மாச குழந்தை நடராஜருக்கு அர்ச்சகர் தீபாரதனை காட்டும் போது கலகலனு சிரிச்சு அத்தனை பேரையும் அதிர்ச்சிக் குள்ளாக்கிருச்சு. அத்தனை பேரும் இது அருள் குழந்தை பின்னால இது அருள்நிலைப் பரப்புமுனு ஒரு சேரப் பாராட்டினாங்க... அதே மாதிரி நேத்து சோமுசெட்டியார் வீட்டிலயும் பேசிச்சு. நானும்தான் கேட்டேன்.

கந்தசாமி : முன்னாள் குமரி அவர்களே! இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்...?

கிழவி : ஏம்பா... நானும் அவங்க ஊர்தாம்பா... மருதூரு.. அந்த ஊர்ல இருந்து இந்த ஊருக்கு என்னைக் கட்டிக் கொடுத்தாங்க

கந்தசாமி : சரி முன்னாள் குமரி அவர்களே! மருதூரிலேயிருந்து, அவங்க நேரே இங்க வந்து குடியேறிட்டாங்களா?

கிழவி : இல்லை தம்பி; இவங்க அப்பா ராமையா பிள்ளை திடீருனு ஒரு நாள் இறந்துட்டார். அம்மா சின்னம்மை குடும்பம் நடத்த முடியாம அவங்க பிறந்த ஊரு பொன்னேரிக்கு போனாங்க. அங்க மூத்தமகன் சுப்பையா படிப்புக்கான வசதி இல்லே. அதுனாலே மெட்ராசுக்கு குடி வந்துட்டாங்க.

கந்தசாமி : நன்றி முன்னாள் குமரி அவர்களே!

முத்து : ஏம்பா கந்தசாமி, முன்னால் குமரி முன்னால் குமரிங்கறியே முன்னாலேயும் கிழவி மாதிரித்தான் தெரியுது பின்னாலேயும் கிழவி மாதிரித்தான் தெரியுது...?

கிழவி : ஏண்டா கட்டையில போறவனுகளா... இந்த கிண்டலெல்லாம் பண்ணாம என்னை கிழவினே சொல்லுங்கடா ராகுக் கோலுங்களா... (கிழவி கீழே குனிந்து எதையோ எடுக்கிறார் முத்துவும் கந்தசாமியும் ஓடுகிறார்கள்)

## காட்சி - 5

(சபாபதி பிள்ளை வந்து கொண்டிருக்கிறார். சுப்பையா முதலியார் எதிரே வருகிறார்)

சபாபதி பிள்ளை : வணக்கம் ஐயா!

சுப்பையா முதலியார்: வணக்கம்! வணக்கம்! என்ன சுப்பையா கொஞ்ச நாளாகவே காணோம் எங்கேயாவது வெளியூர் போயிட்டியா?

சபாபதி பிள்ளை : இல்லைங்க ஐயா, சொற்பொழிவு பண்றதுக்காக பல புஸ்தகங்களையும் படிக்க வேண்டியதா இருந்துச்சு. அதுனால வெளியில வரமுடியல...

சுப்பையா முதலியார்: என்னமோ அப்பா நீ இப்படி பல நூல்களையும் ஆர்வமா படிச்சுகிட்டு இருக்கிற... உன் தம்பி, ராமலிங்கம் ஒரு மக்குன்னே போயிட்டானே நானும் அவனைத் திருத்த எவ்வளவோ முயற்சி எடுத்துக்கிட்டேன் ஒன்னும் முடியலை.

சபாபதி பிள்ளை : ஐயா, உங்களாலே அவனைப் படிக்க வைக்கலைனா யாருனாலேயும் முடியாதுங்களே...!

சுப்பையா முதலியார்: அதனால தான் சொல்றேன். பாடங்களை ஒழுங்காப் படிக்கறதே இல்லை. சொல்லிக் கொடுத்தா எங்கேயோ பிரம்மை பிடித்தவன் போல உட்கார்ந்திருக்கான் பையன்கள்லாம் எங்கிட்ட சொன்னாங்க... இவன் பள்ளிக்கூடம் வர்ர வழியிலே இருக்கிற கந்தசாமி கோயில்ல நுழைஞ்சு ஏதோ புரியாத பாட்டுகளெல்லாம் பாடறான்னு, என்னடா ஒன்னுக்கு உதவாதவன்னு நினைச்சா என்னமோ பாடறானாமே அதுவும் தினமும் பாடறானாமேன்னு நினைச்சு ஒருநாள் அவனுக்குத் தெரியாம அவனைப் பின் தொடர்ந்து போய் பாத்தேன்...

சபாபதி பிள்ளை : அப்புறம்...?

சுப்பையா முதலியார்: அப்புறம் - அவன் அந்த பையன்கள் சொன்ன மாதிரி கந்த கோட்டத்துத்துக்குள்ள நுழைஞ்சான். அதே மாதிரி ஏதேதோ பாடினான்... இதெல்லாம் ஒத்துவராது சுப்பையா... என்பேரு . கெட்டிடும். இனிமே அவன் எங்கிட்ட படிக்க வரவேண்டாம். என்னாலே அவனுக்குப் படிப்பு சொல்லித்தர முடியாது...

சபாபதி பிள்ளை : ஐயா, தயவு பண்ணனும்... கொஞ்ச நாள்லே எல்லாம் சரியாப் போயிடும். அவனை வேணான்னு சொல்லிடாதீங்க...

சுப்ஸ்பயா முதலியார்: இல்லை சுப்பையா என் பேரு கெட்டுப் போகும்... அவனை அனுப்பாதே...

சபாபதி பிள்ளை : ஐயா... தயவு செய்து...

சுப்பையா முதலியார்: அதெல்லாம் என்னைத் தொந்தரவு செய்யாதே! நான் அவசரமா ஒரு வேலையாப் போயிட்டிருக்கேன். பின்னால பார்ப்போம். (போகிறார்)

சபாபதி பிள்ளை : (கோபமாக) ராம...லிங்கம்! உதவாக்கரைப் பயலே! இனிமே உனக்கு வீட்டில் சோறும் கிடையாது, இருக்க இடமும் கிடையாது...! இரு. இப்பவே உன் அண்ணிகிட்ட போய் சொல்றேன்.

(கோபத்தோடு போகிறார்)

(அதுவரை எதிரே உட்கார்ந்து கொண்டிருந்த இருவர் எழுந்து வந்து பேசிக் கொண்டிருக்கின்றனர்.)

ஒருவர் : கேட்டியா கதையை! இந்த தமிழ் வாத்தியார் சுப்பையா முதலியார் அந்தப் பையன் பின்னாலேயே கோவிலுக்குள்ளே போகும் போது நானும்தான் பின்னாலேயே சாமி கும்பிடப் போய்க் கிட்டிருந்தேன்... அந்தப் பையன் பாடின பாட்டு ஒரு தெய்வ அம்சம் பொருந்திய மகான் பாடினதைப் போல இருந்துச்சு.

மற்றொருவர் : அப்படியா! அதென்ன பாட்டு... நீதான் ஒரு தடவை ஒன்ன கேட்டா அப்படியே ஞாபகம் வைச்சு திரும்பிச் சொல்லுவியே இப்ப ஞாபகம் இருக்குதா? ஞாபகம் இருந்தாப் பாடிக் காட்டேன்...

ஒருவர் : ஏப்பா எனக்கு வயசு ஆயிட்டலும் அந்த திறமையெல்லாம் போயிருச்சுன்னா நினைச்சே... மாடு இளைச்சாலும் கொம்பு இளைக்காதுப்பா.

மற்றொருவர் : சரி மாடு, பார்க்கலாம்... தப்பு தப்பு... பாடு பார்க்கலாம்.

ஒருவர் : பார்க்கலாம் என்ன? பாடுறேன்... கேக்கலாம் (பாடுகிறார்)

ஒருமையுடன் உனது திரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள் ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவோர்
உறவு களவாமை வேண்டும்
பெருமை பெறு நினது புகழ் பேசவேண்டும் பொய்மை
பேசா திருக்க வேண்டும் ...
பெரு நெறி பிடித் தொழுக வேண்டும் மதமான பேய்
பிடியா திருக்க வேண்டும்
மருவு பெண்ணாசையை மறக்க வேண்டும் – உனை
மறவா திருக்க வேண்டும்
மதி வேண்டும் நின் கருணை நிதி வேண்டும்
நோயற்ற வாழ்வு நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையில் கந்த கோட்டத்துள் வளர்
தளமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உன் முகச் சைவமணி
சண்முக தெய்வ மணியே!

மற்றொருவர் : ஆகா! ஆகா! என்ன அற்புதமான பாடல்! இந்த தெய்வீகமான பாடலைக் கேட்ட பின்பும் இவர் அந்தப் பையனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க மறுத்திருக்கிறாரே!... எதுனாலப்பா அது...?

ஒருவர் : அதுலதான் இருக்கு விஷயம்! பெரிய வித்வான்களெல்லாம் தன்னுடைய மாணவர்கள் தன்னை மிஞ்சி மேதாவியாப் போயிடப் கூடாதுனு ஒரு பரந்த எண்ணம் வச்சிருப்பாங்க...

மற்றொருவர் : பரந்த எண்ணமா? பறந்த எண்ணமா?

ஒருவர் : அது எண்ணமோ எண்ணம், இருந்தாலும் அது மோசமான எண்ணம்! அதோட இந்த சுப்பையா முதலியார் சொன்னதைக் கேட்டியா 'இவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தா பின்னால என் பேரு கெட்டிடும்'னாரு இல்லே அப்படினா என்ன அர்த்தம்?... இதுதான் அர்த்தம்!

மற்றொருவர் : ஆ...மா...!

ஒருவர் : அதுதான் அவன் பின்னால ஒரு மேதாவியா வந்திட்டா இவரு ஒரு பெரிய பண்டிதரா நடமாட முடியாதல்ல... அதுனாலதான்...!

மற்றொருவர் : இந்த உலகத்துல நடக்கறதெல்லாம் பாத்தா ஒண்ணுமே புரியலையேப்பா!

ஒருவர் : ஒன்னும் புரியாமலிருப்பது தாம்பா உலகம்... ஒன்னும் புரியாமலிருக்கற வரை வாழ்க்கை சுவையா இருக்கும். புரிய ஆரம்பிச்ச உடனே வாழ்க்கை கசந்துடும்.

மற்றொருவர் : அப்ப தற்கொலை பண்ணிக்கறவங்கள்லாம் வாழ்க்கையை முழுதும் புரிஞ்ச மேதாவிங்களா...!

ஒருவர் : அவங்க எல்லாம் தைரியமில்லாத அறிவாளிகள்! இதை நான் சொல்லலை வால்டேர் சொல்லியிருக்கிறார்.

மற்றொருவர் : இப்ப தாம்பா எனக்கும் உலகத்துல முழுசும் ஒன்னும் புரியலை...

*(பின்னணிப்பாட்டு)*

*ஒன்னும் புரியலையே – இங்கே*
*ஒன்னும் புரியலையே*
*கண்ணிலே பார்ப்ப தெல்லாம் நம்ம*
*கண்ணை ஏமாத்துதம்மா*
*மண்ணிலே நம்மைவிட யாரும்*
*மகிழ்ந்திடக் கூடாதம்மா* **(ஒன்னும்)**
*அறிஞன் என்பான் ஞானி என்பான்*
*அத்தனையும் தெரியும் என்பான்*
*தெரியும் என்பான் அத்தனையும்*
*தெரிவிக்க மனம் இறங்கான்* **(ஒன்னும்)**
*என்னைவிட நீ உயர்ந்தால்*
*என்னை நீ மதிக்க மாட்டாய்*
*என்னைவிட நீ தாழ்ந்தால்*
*என்றும் உனை மதிக்க மாட்டேன்* **(ஒன்னும்)**
*மண்ணை விட செடி உயர்ந்தால்*
*மண்ணே மதிக்குதம்மா*
*தன்னைவிடப் பிறர் உயர்ந்தால்*
*கண்ணே வெறுக்குதம்மா*
*என்னே உலகமிது*
*அண்ணே புரியலையே*
*அண்ணே புரியலையே...* **(ஒன்னும்)**

## காட்சி - 6

(ராமலிங்கத்தின் அண்ணி கவலையாய் கன்னத்தில் கை வைத்து அமர்ந்திருக்கிறார், இன்னொரு பெண் வருகிறார்)

இன்னொரு பெண்: அக்கா! ஏக்கா இன்னைக்கு கன்னத்துல கை வைச்சு உட்கார்ந்திட்டே!

ராம. அண்ணி : நான் இன்னைக்கு மட்டுமா, அப்படி உட்கார்ந்திருக்கேன். தினம் தினம்தானே உட்கார்ந்திட்டிருக்கேன்!

இன்னொரு பெண்: ஏன் அக்கா அப்படி?

ராம. அண்ணி : எப்ப ராமலிங்கம் இந்த வீட்டை விட்டுப் போனானோ அப்ப இருந்து அவன் ராத்திரி வந்து கொஞ்சம் சாப்பிடுற வரைக்கும் கவலையா காத்திருந்து காத்திருந்து பழகிப் போச்சும்மா... பழகிப் போச்சு...

இன்னொரு பெண்: என்ன இருந்தாலும் இன்னைக்கு ஒரு ஆயிரம் பேர் வரைக்கும் வந்து சுடச்சுட விருந்து சாப்பிட்டுட்டு போயிட்டாங்க. இன்னைக்கு கூட உன் கொழுந்தன் வராம இருக்கிற மாதிரி சூழ்நிலை ஏற்பட்டிருச்சே!

ராம. அண்ணி ; இன்னைக்கு திவசம் கொடுக்கிறதுக்கு ராமலிங்கம் கூட இருந்து கொடுத்திருந்தா எனக்கு திருப்தியா இருந்திருக்கும்.

இன்னொரு பெண்: சின்னப் பையன்தானே! உங்க வீட்டுக்காரரும் மன்னிச்சிருக்கனும்...

ராம. அண்ணி : அவன் சின்ன பையன்தான். ஆனா அவனுக்குள்ள ஒரு தெய்வீக சக்தி இருக்கிறதை என் உள்ளுணர்வு சொல்லுதம்மா...

இன்னொரு பெண்: இதோ ராமலிங்கமே வந்திருச்சு அக்கா... நான் போறேன். (ராமலிங்கம் வருகிறார்)

ராமலிங்கம் : அண்ணி அண்ணி ரொம்ப பசிக்குது அண்ணி. அண்ணன் வர்றதுக்குள்ள ஏதாவது போடுங்க... (ராமலிங்கத்தின் அண்ணி இலைபோட்டு சாப்பாடு போடுகிறார். அண்ணியின் கண்ணீர் இலையில் விழுகிறது) ஏன் அண்ணி அழறீங்க...?

ராம. அண்ணி : தம்பி இன்னைக்கு உங்க அப்பாவுக்கு திவசம்! இந்த திவசத்திலே நீ முன்னால இருந்து தாய்க்கு தலைமகன், தகப்பனுக்கு கடைசி மகன்ங்கற முறையில, நீ கடைசி மகன்ங்கறதுனால எல்லாத்தையும் செய்யனும். நீயே இப்படி திருட்டுத்தனமா வந்து ஆறிப் போனதைச் சாப்பிடறதைப் பாக்கறப்போ எப்படி தம்பி என் மனம் பொறுத்துக்க முடியும்..!

ராமலிங்கம் : அண்ணி இன்னைக்கு அப்பாவுக்கு திவசமா?... (அண்ணியார் அழுகிறார்) அண்ணி அழாதிங்க, உங்க கண்ணீர் பட்டுபட்டு சாப்பாடே உப்புக்கரிக்குது... உப்பிட்டவரை உள்ளளவும் நினைனு சொல்லுவாங்க... உங்களை என் உயிர் உள்ளவரைக்கும் தெய்வமா நினைப்பேன் மேலும் உப்பை போடாதீங்க...

ராம. அண்ணி : தம்பி இப்படியே பட்டினி கிடக்கறதையும் அண்ணனுக்கு பயந்து பயந்து தினம் தினம் கொல்லைப் புறமா வந்து சாப்பிட்டுப் போறதையும் என்னால பொறுத்துக்க முடியலைப்பா. அண்ணன் சொல்றதைக் கேட்டு நீ வீட்டுக்கு வந்திடு தம்பி.

ராமலிங்கம் : அண்ணி, எனக்காக மாடியில ஒரு அறை ஒதுக்கி கொடுத்திடுங்க. நான் இனிமேல படிக்கிறேன்.

ராம. அண்ணி : நி..ஜ..ம்..மா..வா..!

ராமலிங்கம் : உண்மையாத்தான் சொல்றேன் அண்ணி. அண்ணன்கிட்ட சொல்லி ஏற்பாடு செய்யுங்க. அப்படீன்னா நாளைக்கேகூட நான் வரத் தயார்.

ராம. அண்ணி : அண்ணன்கிட்ட சொல்லி ஏற்பாடு செஞ்சுட்டு நாளைக்கே உன்னை கோவில்ல வந்து பார்த்து கூப்பிட்டு வர்றேன் தம்பி.

ராமலிங்கம் : அண்ணி, நீங்க சாப்பிட்டீங்களா?

ராம அண்ணி : இன்னும் இல்லை தம்பி... நீ சாப்பிடாம என்னைக்கு நான் சாப்பிட்டிருக்கேன்.? நீ வீட்டுக்கு வர்றேன்னு சொன்னியே... அதுனால இதோ இப்பவே ரொம்ப பசி எடுத்திருக்கு! போய் சாப்பிடுறேன்... நீ போயிட்டுவா தம்பி.... (உள்ளே போகிறார் அண்ணி)

## காட்சி - 7

(கந்தசாமி தீப்பெட்டியிலிருந்து ஒவ்வொரு குச்சியாக எடுத்து உரசிப்பார்த்து ஊதிவிட்டு மீண்டும் இன்னொரு பெட்டியில் வைக்கிறான்)

முத்து : என்ன கந்தசாமி தீப்பெட்டிகளையெல்லாம் இப்படி உரசி உரசிப் பாத்து மறுபடி இன்னொரு பெட்டியில வைக்கிறீயே... ஏன்?

கந்தசாமி : அதை ஏன் கேக்கற! அன்னைக்கு ஒரு தீப்பெட்டியில 50 குச்சினு போட்டிருந்துச்சு 45 குச்சிதான் இருந்துச்சு. அதுல இருந்து எண்ணி எண்ணிப் பாத்து குறைச்சலா இருக்கிறதை கடைக்காரர்கிட்டே கேட்டு வாங்கிக்குவேன்... ஆனா பாருங்க போனவாரம் ஒரு தீப்பெட்டியில ஆறு குச்சி நவுத்துப் போய் இருந்துச்சு அதுனாலதான் இன்னைக்கு இருந்து இனிமே தீப்பெட்டி வாங்கினா எல்லாக் குச்சிகளையும் உரசி உரசிப் பார்த்து வாங்கனும்னு முடிவு செஞ்சுட்டேன். அதுதான் உரசுறேன்...

முத்து : ஆகா! ஆகாஹா.. காஹா! நீ தான் சிறந்த படிப்பாளி உங்கிட்டதான் நாங்கள்லாம் கத்துக்கனும்...

கந்தசாமி : சும்மா கிண்டலெல்லாம் பண்ணாதே நான் உன்னைவிட ஆழ்ந்த படிப்பு படிச்சிருக்கேன், ஆமாம்!

முத்து : ஆழ்ந்த... படிப்பா...?

கந்தசாமி : பின்னே என்ன? நான் ஒவ்வொரு வகுப்பிலயும் அஞ்சு அஞ்சு வருஷம் படிச்சிருக்கேனாக்கும்... உன்னைப் போல அரைகுறையாப் படிச்சு வருஷத்துக்கு ஒரு கிளாஸ் மட்டும் படிச்சவனில்லை நான் தெரிஞ்சுக்கோ...!

முத்து : நீ அஞ்சு வருஷம் படிச்சேன்னியே, ராமலிங்கம் எந்த வகுப்பிலேயும் உருப்படியாப் படிக்காம எவ்வளவு பெரிய ஞானம் வந்திருக்கு பாத்தியா! இலக்கணம், இலக்கியம், நிகண்டு, சதகம், அந்தாதி, நன்னூல் இப்படி எதுவுமே படிக்காம சொல் சுத்தமா பாடி பொருள் சொல்றான் பாத்தியா?

கந்தசாமி : அதுசரி, யாராவது சொல்லித் தராமலே எல்லா ஞானமும் வந்திருக்குமாக்கும்...?

முத்து : ஆமா, கந்தசாமி, ராமலிங்கம் படிக்க மாடியில ஒரு அறை கொடுத்தாங்க அவன் அந்த அறைக்குள்ள கண்ணாடியை சுவத்தில மாட்டி சாம்பிராணி புகை போட்டு அதையே பாத்துக்கிட்டு இருப்பான். திடீர்னு அவன் உருவம் கண்ணாடியில தெரியலை... தன் உருவம் தன்னுள்ளே ஐக்கியமாகிவிடும் நிலையே... பிரம்ம நிலை. அவனே பிராம்மணன்!

கந்தசாமி : ஏய் ஜாதியைப் பத்தியெல்லாம் பேசாதே! எனக்குப் பிடிக்காது.

முத்து : நான் ஜாதியைப் பத்தி பேசலையே! நீ தான் தவறாகப் புரிஞ்சிக்கிட்டே தன்னுள் இருக்கும் சக்தியைப் பார்ப்பவன் – தன்னை யார் என்று

திரும்பிப் பார்ப்பவன் பார்ப்பணன். தன்னுள் பிரமமே இருக்குது அதாவது இறை நிலையே குடி கொண்டிருக்குது அப்படினு உணருறவன் பிராமணன்... இதுல ஜாதி எங்க இருக்கு..?

கந்தசாமி : அப்ப ராமலிங்கம் ஒரு பிராமணன் அப்படித்தானே...!

முத்து : நிச்சயமா! நீயும்கூட பார்ப்பணனாவும், பிராமணனாவும் ஆக முடியும். இப்ப, அன்னைக்கு ராமலிங்கம் சொற்பொழிவு செஞ்சுட்டுப் போனதுல இருந்து அவுங்க அண்ணனும் அண்ணியும் அவனுக்குள்ள இருக்கிற தெய்வீக ஞான சக்தியை உணர்ந்து அவனுக்கு ரொம்பவும் பணிவா தொண்டு செஞ்சுக்கிட்டு வர்ராங்க...

கந்தசாமி : அப்ப ராமலிங்கம் மனசு இப்ப சந்தோசமா இருக்கும்... இல்லியா...?

முத்து : இல்லையே! ராமலிங்கம் தனக்கு அண்ணனும் அண்ணியும் ரொம்ப மரியாதை கொடுக்கிறதைப் பார்த்து ரொம்பவும் சங்கோஜப் பட்டுக்கிட்டிருக்கான்...

கந்தசாமி : அ..ப்..பா! உண்மையிலேயே ராமலிங்கம் ஒரு தெய்வீகப் பிறவிதான்

முத்து : இதைப் புரிய இவ்வளவு நேரமாச்சா...! இருக்காதா?... பின்னே நீ ஆழ்ந்த படிப்பு படிச்சவனில்லையா...?

## காட்சி - 8

(சபாபதி வீடு. வெளியிலிருந்து ஒருவர் கூப்பிடுகின்றார்)

*வந்தவர் : அம்மா, ஐயா இருக்காங்களா...?*

*சபாபதி மனைவி : யா..ரு...?*

*வந்தவர் : சோமு செட்டியார் அனுப்பினாங்க... ஐயாவைப் பாக்கணும்.*

*சபா மனைவி ; அப்படியா? உள்ளே வா தம்பி... ஏனுங்க சோமு செட்டியார் ஆளை அனுப்பிச்சிருக்காங்க.*

*சபாபதி : (உள்ளேயிருந்து வந்து கொண்டே) அடே ... வா தம்பி... என்ன... என்ன சமாச்சாரம்..?*

*வந்தவர் : செட்டியார் இந்தப் பணத்தை உங்ககிட்ட கொடுத்திட்டு வரச் சொன்னாருங்க. சொற்பொழிவு முடிஞ்சு வர்ர போது தம்பி கையில செட்டியார் பணம் கொடுத்தனுப்புறாருங்க... தம்பி தினமும் இந்தப்பக்கம் வந்து வீசி எறிஞ்சிட்டு வர்ரதா செட்டியார்கிட்டே பல பேரும் சொன்னாங்க. அதனால செட்டியார் பணத்தை உங்க கையில கொடுத்திட்டு வரச் சொன்னாருங்க.*

*சபாபதி : அப்படியா! செட்டியார் இதுவரை பணம் கொடுத்தனுப்பின விபரமே எனக்குத் தெரியாதே! இப்ப செலவுக்கு கொஞ்சம் பணம் தேவைப்பட்டுச்சு. நானே செட்டியார்கிட்டே வந்து பணம் கொஞ்சம் வாங்கிட்டு வரலாம்னு நினைச்சுக்கிட்டிருந்தேன்.*

சபா. மனைவி : என்னங்க? தம்பி இப்படி பணத்தை வீசி எறிஞ்சிட்டு வருது...! நாம செலவுக்கு எவ்வளவு கஷ்டப்படறோம். தம்பியை நாம புரிஞ்சுக்க முடிலையே!

சபாபதி : நீ மட்டுமா அவனைப் புரிஞ்சுக்க முடியலை? நானும் கூடத்தான்!...

சபா. மனைவி : தம்பி வருதுங்க (ராமலிங்கம் வருகிறார்)

ராமலிங்கம் : என்னங்க நீங்க சோமுசெட்டியார் வீட்டு ஆள் தானே...?

வந்தவர் : ஆமாங்க செட்டியார் வீட்டு கார் டிரைவர்...

ராமலிங்கம் : எங்க இப்படி...?

வந்தவர் : செட்டியார் கொடுக்கிற பணத்தையெல்லாம் நீங்க வீசி எறிஞ்சுட்டு வர்ரதை செட்டியார் கேள்விப்பட்டு, பணத்தை வீட்டுக்குக் கொடுத்தனுப்பிச்சாருங்க... அதான் கொண்டாந்து கொடுத்தேன்.

ராமலிங்கம் : பணம் வேண்டாம்னு ஒதுக்கினாலும் வீடு தேடி வருதே...!

வந்தவர் : எதுக்கு பணம் வேணாம்னாலும் உங்க சாப்பாட்டுக்காவது பணம் வேணும்ங்களே!

ராமலிங்கம் : என்ன? என்னோட சாப்பாட்டுக்கா...?

வந்தவர் : இல்லீங்க.. உங்க அத்தனை பேரின் சாப்பாட்டுக்கு...

சபா. மனைவி : அவரு சொல்றதும் நியாயந்தானே தம்பி...?

ராமலிங்கம் : அப்படியா...! ... திருச்சிற்றம்பலம்.. என்னை திருவொற்றியூர் தியாகராஜப் பெருமான் அழைக்கிறார். நான் யாரையும் சார்ந்து பாரமா இருக்க விரும்பலை...!

வந்தவர் : என்னங்க நான் சொன்னது உங்க மனசுல துப்பாப் பட்டுடுச்சுன்னா மன்னிச்சுருங்க.. இதுக்காகப் போயி வீட்டைப் விட்டுப் போறமுங்கறீங்களே!

சபாபதி : தம்பி என்ன இது? நாங்க, வேற ஏதாச்சும் சொன்னோமா? ஏன் இப்படி திருவொற்றியூர் போறமுங்கற...?

ராமலிங்கம் : இல்லையண்ணா இது இறைவனின் அழைப்பு...? இது அவன் எடுத்த முடிவு! அதன்படி நடப்பது என் கடமை...!

சபா. மனைவி : தம்பி நீங்க வீட்டை விட்டுப் போகக் கூடாது!

ராமலிங்கம் : அண்ணி நான் எங்க இருந்தாலும் நான் இங்கயே இருக்கிறதா நீங்க நினைச்சுக்குங்க... நீங்க முன்னாடி அழைச்சீங்க... நான் வீட்டுக்கு வந்து இவ்வளவு நாள் இருந்தேன்... இப்ப தியாகராஜப் பெருமான் அழைக்கிறார்... போறேன். போனாலும் வருவேன்... வந்தாலும் போவேன்... போய் போய் வருவேன்...

சபாபதி : நாங்க இனி என்ன சொன்னாலும் உன் மனசை எங்களால மாத்த முடியாது தம்பி... நீ அங்க போனாலும் அடிக்கடி இங்க வந்து வந்து போய்க்கிட்டிரு தம்பி...

ராமலிங்கம் : நிச்சயமா வருவேன்... வரட்டுங்களா...

*(பாடுகிறார்)*

*தனித்தனி முக்கனி பிழிந்து வடித் தொன்றாய்க் கூட்டி*
*சர்க்கரையும் கற்கண்டின் பொடியும் மிகக் கலந்தே...*
*தனித்த நறுந் தேன் பெய்து பசும்பாலும் தெங்கின்*
*தனிப்பாலுந் சேர்ந்தொரு தீம்பருப் பிடியும் விரவி*
*இனித்த நறு நெய் அளந்தே இளஞ்சூட்டின் இறக்கி*
*எடுத்த சுவைக் கட்டியினும் இனித்திடும் தெள்ளமுதே*
*அனித்தமறத் திருப் பொதுவில் விளங்கு நடத் தரசே*
*அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கல் அணிந்தருளே!*

## காட்சி - 9

(முத்து கந்தசாமியைத் துரத்திக் கொண்டே வருகிறார்)

*முத்து* : *விடாதே! விடாதே! பிடி! பிடி! (கந்தசாமி ஓடுகிறார். சிறிது நிற்கிறார் மீண்டும் முத்து துரத்துகிறார். ஒருவர் வந்து குறுக்காட்டுகிறார்)*

*வந்தவர்* : *ஏம்பா முத்து ஏன் அவரை துரத்துற?... பாவம்!*

*முத்து* : *பாவமா! அவரா பாவம்! நீங்களே சொல்லுங்க. எங்க வீட்டிலயிருந்து அரை மைல் தூரத்தில் ஆறு இருக்குதுங்க. துணி துவைக்கிற அளவுக்கு தண்ணி வருதான்னு பாக்கப் போனேனுங்க. ஆத்துக்குப் பக்கத்துல போயிட்டேங்க இந்த கந்தசாமி எதுக்க வந்துக்கிட்டுருந்தார். ஆத்துல தண்ணி எவ்வளவு வருதுன்னு கேட்டேனுங்க...*

*கந்தசாமி* : *மிச்சத்தை நான் சொல்றேனுங்க... தண்ணி தலைகீழா ஓடுதுன்னு சொன்னேனுங்க பள்ளத்துல கழுத்தளவு தண்ணி ஓடுதுன்னு*

சொன்னேனுங்க. இவரு வீட்டுக்குப் போயிட்டாருங்க கொஞ்ச நேரத்தில் என்னை துரத்துறாருங்க..

வந்தவர் : நீ என் துரத்துற?

முத்து : ஆத்துல தண்ணி பாதம் கூட நினையலீங்க பொய் சொல்லிட்டாருங்க வீணா என்னை நடக்க விட்டுட்டாருங்க.

கந்தசாமி : நான் பொய் சொல்லலை... தலைகீழா தண்ணி ஓடுதுன்னு சொன்னேன். நீ பக்கத்துல இருக்கிற பள்ளத்துல தலைகீழா நின்னு பாத்தா கழுத்தளவு தண்ணி இருக்கும். தலைகீழா ஓடுற தண்ணியில நேரா நின்னு பாத்தா கழுத்தளவு தண்ணி எப்படித் தெரியும். தலைகீழா ஓடுற தண்ணியில தலைகீழா நின்னு பாத்தாலே கழுத்தளவு தண்ணி தெரியும்...?

முத்து : இந்த ஆள் காட்டுக்குள்ள இருக்க வேண்டிய ஆள் ஊருக்குள்ள எப்படி வந்தாருன்னு தெரியலை.

வந்தவர் : நீ இப்படி சொன்னதும்தான் ஞாபகம் வருது இப்ப நான் வந்துகிட்டிருந்தேன்... அங்க ஒரு திண்ணையில ஒரு சிவயோகி பழுத்த பழம் போல உட்கார்ந்திருக்கிறார். நான் வர்றேன்... ஒருத்தர் போகும் போது இதோ பசுமாடு போகுதுனு சொன்னார். இன்னொருத்தர் போனார் பன்றிக்குட்டி போகுது ...ார்...

கந்தசாமி : என்னையுங் கூடத்தான் அவர் பாத்து இதோ, குள்ளநரி போகுதுன்னார்.

முத்து : என்னையும் கூட அவர் பாத்து எருது போகுதுன்னார்.

வந்தவர் : சரி வாங்க, நாம போயி அவரை மறுபடியும் பார்க்கலாம் (போகிறார்கள், முத்து கந்தசாமியை முறைத்துக் கொண்டே போகிறார். கந்தசாமி ஒதுங்கிக் கொண்டே போகிறார்.

## காட்சி - 10

(ஒரு சிவயோகி உட்கார்ந்திருக்கிறார். முத்து, கந்தசாமி மற்றொருவர் அந்த வழியில் போகின்றனர்)

சிவயோகி : ஒரு கூட்டம் போகுது...

முத்து : பாத்தியா...? அப்பால என்னை எருது போகுதுன்னார். இப்ப கந்தசாமிகூட நான் சேர்ந்து வந்ததுனால என்னை கூட்டம் போகுதுன்னுட்டார் – பன்றிக்கூட்டம் கழுதைக் கூட்டமுனு பேசற மாதிரிப் பேசிப்புட்டாரு...

கந்தசாமி : அப்ப என்னை கழுதை பன்றி அப்படீனு சொல்றீங்களா?

வந்தவர் : இருங்க... இருங்க... ராமலிங்கம் வர்றார்... அவரை என்ன சொல்வார்னு பார்க்கலாம்... (ராமலிங்கம் அந்த வழியே போகிறார்)

சிவயோகி : இதோ ஒரு மனிதன் போகிறான்...

(ராமலிங்கம் திரும்பிப் பார்க்கிறார். மீண்டும் செல்வதற்காக இரண்டு அடி எடுத்து வைக்கிறார். இவர்கள் மூவரும் ராமலிங்கத்திடம் ஓடுகிறார்கள்)

முத்து : ஐயா, தம்பி ராமலிங்கம் நீ எங்களை விட வயசில் சின்னவர்... இருந்தாலும் எங்களை விட பெரியவர்.

ராமலிங்கம் : என்ன சொல்றீங்க, புரியலையே...!

முத்து : இங்கே உட்கார்ந்திருக்கிற ஒரு சாமியார் இந்தப் பக்கம் நடந்து போற ஒவ்வொருத்தரையும் பாத்து மாடு போகுது, நரி போகுது, கழுதை போகுது எருது போகுதுன்னு சொல்லிக்கிட்டிருந்தார் ஆனா உன் ஒருத்தரைப் பார்த்துதான் "மனிதன் போகிறான்"ங்கறார்.

ராமலிங்கம் : அப்படியா...! (ராமலிங்கம் திரும்பி வந்து சிவயோகியிடத்தில் செல்லுகிறார்)

சிவயோகி : வா மனிதனே! வா... உட்கார்!

ராமலிங்கம் : சுவாமி நீங்கள் என்னை மட்டும் மனிதன் போகின்றான் என்று சொன்னீர்களே நான் அதற்குத் தகுதியுடையவன் தானா என்று யோசிக்கிறேன். நான் மற்றவர்களை விட எளிமையானவனாக கருதுகிறேன் அதனால்தான் கைகளை வீசி நடக்கவும் பயந்தேன். நான் தவறு செய்தேன், செய்கிறேன் செய்வேன் நாயினும் கடையேன். என்னை மட்டும் மனிதன் என்று தாங்கள் சொன்னது தகுதியுடையதுதானா என்று யோசிக்கிறேன்...

*சிவயோகி* : *இந்த சிறுவயதிலே இவ்வளவு பணிவும் தன்னைப் பற்றிக் கணிக்க வேண்டும் என்ற உணர்வும் இருக்கிறதே... அதனால் தான் உன்னை மனிதன் என்று சொன்னேன்.*

*ராமலிங்கம்* : *சுவாமி, நமக்குள்ளே பெரிய ஒரு மாபெரும் சக்தி இருக்கிறதே அதுதான் நம்மை உருவாக்கியது; நம்மை இன்றும் காத்து வருகிறது. ஆனால் என்றைக்கும் அப்படியே காத்துவருவதில்லை. குறிப்பிட்ட காலத்தில் அழிக்கவும் செய்கிறதே அந்த அழியாத சக்தியின் முன்னே அழிந்து போகிற இந்த இழிந்த பிறப்பு எங்கே... இந்த எண்ணம்தான் என்னை நானே சோதனை செய்வதற்கு அடிப்படை சுவாமி!*

*சிவயோகி* : *தற்சோதனை என்ற முறையில் எவனொருவன் இருபத்தி நாலு மணி நேரத்தில் பத்து நிமிடம் ஒதுக்கி தன்னுடைய குற்றங்களை ஆராய்கிறானோ, அதை உணர்கிறானோ அவனே உயர்ந்தவன். அவன்தான் மனிதன்!*

*ராமலிங்கம்* : *என்னுடைய இயலாமையை உணருகிற போதுதான் என்னுள்ளே ஒரு மாபெரும் சக்தி அவ்வப்போது ஊற்றாக ஓடிப் பாய்வதை உணருகிறேன் சுவாமி.*

*சிவயோகி* ; *உனக்கு மட்டும் அல்ல எல்லோருக்குமே தன் தவறுகளை உணருகிற போது – தன்னால் எதுவும் நடப்பதில்லை தான் ஒரு கருவி மட்டும்தான் என்று உணருகிற போது ஒரு அதீதமான சக்தி உருவாகும். ஒரு பெட்டியை ஒன்றுமில்லாமல் சுத்தமாக வைத்துக்*

கொண்டால்தான் ஏராளமான விலையுயர்ந்த நகைகளைப் போட்டு வைக்க முடியும். முடிந்த அளவு குப்பை கூளங்களை அதில் போட்டு வைத்திருந்தோமேயானால் விலையுயர்ந்தவைகள் கிடைக்கின்ற போது உள்ளே வைப்பதற்கு இடம் இருக்காது. ஆகவே ஒவ்வொருவரும் தங்கள் மனமென்னும் பெட்டியை சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

ராமலிங்கம் : ஒன்றுமில்லாத நிலையில், நம் மனதை வைத்துக் கொள்ளும் பழக்கம் ஏற்பட ஏதாவது வழி சொல்லுங்களேன் சுவாமி.

சிவயோகி : ஒன்றே ஒன்றை மட்டும் நினைவு வைத்துக் கொண்டால் போதும்... ஒன்றுமற்ற நிலைக்கு அதிக சக்தி உண்டு என்பது புரியும்...

ராமலிங்கம் : அந்த ஒன்று என்னவென்று சொல்லுங்களேன் சுவாமி...?

சிவயோகி : இந்த பூமியில் எத்தனையோ கனமான பொருட்கள் இருக்கின்றன. சின்னக் கல் நம் கால்மீது விழுந்தால், அதன் கனத்தை நம் கால் தாங்குவதில்லை. இதைவிட எத்தனை எத்தனையோ பொருட்களை இந்த உலகம் தாங்கிக் கொண்டிருக்கிறது... இந்த உலகத்தையோ... எது தாங்குகிறது..?

ராமலிங்கம் · உலகம் வெட்ட வெளியில்தான் மிதந்து கொண்டிருக்கிறது சுவாமி.

சிவயோகி : அப்படியானால் இந்தப் பூமி கனமானதா? இந்தக் கனமான பூமியைத் தாங்குகிற வெட்ட வெளி கனமானதா?

ராமலிங்கம் : கனமான ஒன்றை தாங்குகின்ற ஒன்று கனமானதாகத் தான் இருக்க வேண்டும். ஆகவே கனமான பூமியைத் தாங்குகின்ற வெட்ட வெளிதான் கனமானது சுவாமி.

சிவயோகி : வெட்ட வெளி என்பது ஒன்றும் இல்லாததுதானே? ஒன்றும் இல்லாத ஒன்று எல்லாம் நிரம்பிய ஒன்றை விட சக்தியுடையது தானே...?

ராமலிங்கம் : ஆமாம் சுவாமி!

சிவயோகி : ஆகவே மனதை ஒன்றும் இல்லாமல் சுத்தமாக வைத்திருந்தால் அதுதான் மிகவும் சக்தி வாய்ந்த நிலை! இல்லையா..?

ராமலிங்கம் : உண்மைதான் சுவாமி!

சிவயோகி : தம்பி, உனக்குத் தெரியாதது போல இவ்வளவு விளக்கம் கேட்டாய் உனக்கு எல்லாம் தெரியும் என்று எனக்குத் தெரியும். மற்றவர்களுக்கு தெரியட்டுமே என்றுதான் என்னிடம் இவ்வளவும் கேட்டாய் என்பதும் எனக்குத் தெரியும்...

ராமலிங்கம் : சுவாமி என்னை ஆசீர்வதியுங்கள், போய் வருகிறேன்.

சிவயோகி : புருஷவஸ்து! போய் வா (ராமலிங்கம் போகிறார் சாமியார் மறைகிறார்)

முத்து : என்னங்க ராமலிங்கம் போனதும் அந்த சாமியாரும் மறைஞ்சிட்டாரே! அவரு சாமியார் இல்லைங்க! சாமியேதான்...

## காட்சி - 11

கந்தசாமி : (பணம் எண்ணிக் கொண்டே வருகிறார்) பத்து.. பதினைந்து.. இருபது.. இருபத்திரெண்டு...

முத்து : (வந்து கொண்டே) கந்தசாமி ஏம்பா இப்படி கஷ்டப்படறே கொண்டுவா நான் எண்ணித் தர்றேன்.

கந்தசாமி : நீ என்ன கணக்கில புலியோ?

முத்து : என்ன அப்படி கேட்டுட்டே? படிக்கும் போது கணக்குல நூத்துக்கு நூறு மார்க் தெரியுமா?

கந்தசாமி : அப்படியா நான் ஒரு கணக்குப் போடுறேன் செய்வியா?

முத்து : கணக்கைச் சொல்லு மொதல்ல...

கந்தசாமி : ஒரு மாச ஆட்டுக்குட்டிக்கு 4 கால் 4 மாச ஆட்டுக்குட்டிக்கு எத்தனை கால்?

முத்து : இது தெரியாதா 16 கால்.

கந்தசாமி : இதுதான் நீ 100க்கு 100 மார்க் வங்கின லட்சணமாக்கும் 4 மாச ஆட்டுக்குட்டிக்கும் 4 கால்தாம்பா.

முத்து : நீ தான் புரியாமல் பேசறே – 16 கால் எத்தனை? 16 கால் 4 தானே.

கந்தசாமி : ஆ...மா!... 16 கால் 4 தான் இது எனக்குப் புரியாமல் போச்சே! சரி நீ ராமலிங்கம் எழுதின பாடல்கள் எத்தனை சொல்லு...?

முத்து : ஐயையோ அதை மட்டும் என்னால் சொல்ல முடியாதுப்பா திருவொற்றியூர் போனதுக்கப்புறம் இவர் இங்கிதமாலை, எழுத்தறியும் பெருமாள் மாலை, அப்புறம் விண்ணப்பங்கள் மலைமலையா எழுதியிருக்காரு. அந்தக் கணக்கை சொல்லனும்னா எனக்கு 100–க்கு சைபர் மார்க்தான் கிடைக்கும்.

கந்தசாமி : நான் சாப்பிட கடைக்குப் போறேன் வர்ரியா... நேரமாயிருச்சு கடை அடைச்சுருவாங்க...

முத்து : விபரம் தெரியுமா? நேத்து ராமலிங்கம் அவங்க வீட்டுக்கு போகும் போது தாமதம் ஆனதாலே வீட்டைச் சாத்திட்டாங்க. அதனால வீட்டுத் திண்ணையிலே படுத்திட்டாரு . அவங்க அக்கா வடிவில அருள் அன்னை ஆதிபராசக்தி வந்து உணவு கொடுத்திட்டு போயிட்டாங்க. கொஞ்ச நேரத்துல அவங்க அக்கா கதவைத் திறந்து வந்து சாப்பிடக் கூப்பிட்டிருக்காங்க. "இப்பதானே அக்கா சாப்பாடு போட்டீங்க" அப்படீனு ராமலிங்கம் சொல்லிருக்காரு. அப்பத்தான் தெரியும் ஆதிபராசக்தியே இவரு பசியைத் தாங்காம வந்து உணவு கொடுத்திருக்கானு...

கந்தசாமி : உனக்கு வேற ஒன்னும் தெரியுமா... போனவாரம் ராமலிங்கம் கோவில்ல பசியோட படுத்திட்டாரு. அப்ப கோவில் குருக்கள் வந்து இவருக்கு

சக்கரை பொங்கல் சுண்டல் பிரசாதங்களைக் கொடுத்து பசி தீரும் வரை சாப்பிட வைத்திருக்கிறார். கொஞ்ச நேரத்துல கோவில் குருக்கள் வந்து பிரசாதம் கொடுத்தாரு. அப்பத்தான் புரிஞ்சது கொஞ்சம் முன்னால வந்து பசியைப் போக்கினது. தந்தை பாசத்துடன் வந்த யோகேசர்தான்னு.

முத்து : அப்பனாகவும் அம்மாவாகவும் சிவனும் பராசக்தியும் இவருக்காக வந்து பாசத்துடன் உணவு கொடுத்து பசி தீர்த்திருக்காங்க. இது புராணத்திலயும் சரி நிஜ வாழ்க்கையிலும் சரி இதுதான் முதல்தடவை.

கந்தசாமி : அதுசரி, என்பசிக்கு யாராவது ஒருத்தர் அம்மாவாவது அப்பாவாவது இப்ப வந்து என்பசியை தீர்க்கட்டும்...

முத்து : இப்படியே பேசிக்கிட்டிருந்தா கடையை அடைச்சிடுவாங்க "அம்மா அப்பா"ன்னு கத்தினாலும் யாரும் சோறு போடமாட்டாங்க. போய்யா போய் சாப்பிட்டுட்டுவா.

## காட்சி - 12

(சிலருடன் ராமலிங்கம் சென்று கொண்டிருக்கிறார். ஒரு வயதான மாது வருகிறார்)

மாது : ஐயா வணக்கம்!

ராமலிங்கம் : வணக்கம்! நீங்க யாருன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?

மாது : ஐயா, நான் இங்க பட்டிணத்தடிகள் சமாதியில ஆலயத்தொண்டு செஞ்சுக்கிட்டு வர்றேன். என் கூட தொண்டு செய்யறவங்க உங்க தெய்வ சக்தியைப் புரிஞ்சுக்காம பேசறாங்க. அதனால எனக்கு நீங்க ஒரு அற்புதம் காட்டி அருள வேணும்.

ராமலிங்கம் : அப்படியா? அவங்க பேசினா பேசிட்டுப் போகட்டும்... எங்கிட்ட தெய்வ சக்தி இருக்குனு நான் சொல்ல வரலை... எல்லோரிடத்திலயும் இருக்கிற சக்தி தான் எங்கிட்டயும் இருக்கு இருந்தாலும் நீங்க கேட்டுட்டீங்க... இந்தாங்க... (கைநிறைய மண்ணை அள்ளிக் கொடுக்கிறார்) கைகளை நல்லா மூடிக்கிங்க... இப்ப திறங்க...

மாது : ஆகா! ஆகா! என்ன இது திறந்து பார்த்தவுடனே அத்தனை மணலும் சிவலிங்கங்களா மாறிட்டுதே!

(ராமலிங்கம் மேலும் நடக்கிறார்)

உடன் வந்தவர் : ஐயா, கொஞ்சம் வேகமா நடங்க... நாம திருவொற்றியூர் போறதுக்குள்ள இருட்டிப் போகும். என்ன செய்யறதுனே தெரியல...

ராமலிங்கம் : இன்னும் பத்தே நிமிஷங்களில போய்ச் சேருகிற குறுக்கு வழி எனக்குத் தெரியும்... வாங்க, போகலாம்...

உடன் வந்தவர் : ஆகா, ஆகா! திருவொற்றியூர் வந்துட்டோம். அரைபர்லாங்கூட நடக்கலை அதுக்குள்ள திருவொற்றியூர் கண்ணுக்குத் தெரியுது. இது என்ன மாய்மாலம் போல இருக்கு! இது என்ன

விந்தை! ஐயா உங்களோட சித்துக்களில் இதுவும் ஒன்னுங்கறது எனக்கு புரியுது...

ராமலிங்கம் : எங்கிட்ட ஏதுமில்லை! எல்லாம் இறைவன் செயல்!

உடன் வந்தவர் : ஐயா, ஐயா, பாம்பு பாம்பு! பாம்பு உங்க காலைச் சுத்திக்கிட்டுது சூ! சூ! ... ஐயோ, போக மாட்டேங்குது...

ராமலிங்கம் : ஏன் ஐயா பதற்றம்... அது தானே போயிரும்...

உடன் வந்தவர் : ஆ..மா..! பாம்பு, தானே விலகிட்டு ஓடுது (பக்கத்தில் நிற்பவரிடம்) அண்ணே என்னை ஒரு கிள்ளு கிள்ளு....

பக்கத்தில் நிற்பவர்: ஏன் கிள்ளச்சொல்ற

உடன் வந்தவர் : இல்லே இதெல்லாம் நிஜம்மாவே நடக்குதா இல்ல கனவுல நடக்குதான்னு தெரியலை, அதுக்குத்தான்...

பக்கத்தில் நிற்பவர்: அங்க பாரு... அங்க பாரு...

(ஒரு மோகினிப்பிசாசு வருகிறது)

உடன் வந்தவர் : ஐயையோ மோகினிப்பிசாசு! மோகினிப்பிசாசு! ஐயா ஐயா காப்பாத்துங்க (மோகினிப்பிசாசு ஆய் ஊய் ன்னு கத்திக் கொண்டே வருகிறது)

ராமலிங்கம் : போ... உனக்கு இங்கு இடமில்லை... போ... (மோகினிப்பிசாசு ஓடுகிறது) அந்தப் பக்கம் போகாதே இந்தப் பக்கம் போ (கையைக் காட்டுகிறார் மோகினிப்பிசாசு அவர் கை காட்டிய பக்கம் ஓடுகிறது)

*உடன் வந்தவர் : ஐயா இந்த மோகினிப்பிசாசு மாதிரி எனக்கு ரெண்டு எதிரிங்க இருக்காங்க அவங்களையும் கண்காணாம தொலைஞ்சுட வைச்சிடுங்க...*

*ராமலிங்கம் : நமக்கு எதிரி எங்கே இருக்காங்க? நமக்கு எதிரி நாமேதானே...! நாம் எல்லோரையும் நேசிச்சா நம்மை எல்லோரும் நேசிப்பாங்க...*

*உடன் வந்தவர் : இந்த வாக்கியத்தை எல்லோரும்தான் சொல்றாங்க... நானும் எல்லோரையும் நேசிக்கிறேன். ஆனா இந்த ரெண்டு பேரை திருத்த முடியலையே...!*

*ராமலிங்கம் : எந்த விதிகளுக்கும் விதிவிலக்கு இருக்கும்.... ஆனா விதிவிலக்குகளே விதிகளாகி விட முடியாது...*

*உடன் வந்தவர் : அந்த விதிவிலக்கை விலக்கிட முடியாதுங்களா ஐயா...*

*ராமலிங்கம் : நீங்க எல்லோரிடத்திலும் அன்பைக் காட்டுங்க, உங்க எதிரிங்களையும் வாழ்த்துங்க... மனசார வாழ்த்துங்க... நீங்க வாழ்த்த வாழ்த்த அந்த மன அலைகள் அவர்கள் மனதைத் தாக்கி அவர்களை உங்கள் பக்கம் ஈர்த்துக் கொண்டாந்திரும்...*

*உடன் வந்தவர் : அப்படீங்களா? நாளைக்கி இருந்து அப்படியே செஞ்சு பாக்கிறேன்.*

*ராமலிங்கம் : செஞ்சு பாருங்கள். ஆரம்பத்தில் அலைகள் அவரைத் தாக்கும் போது உங்களுடைய வாழ்த்தினால அவங்க மனம் மாறி, முதல்ல உங்களுக்கு கெடுதல் செய்யறதை*

விட்டுடுவாங்க... பின்னால நீங்க வாழ்த்த
வாழ்த்த உங்களைத் தேடி அவங்க வருவாங்க...
சந்தேகம் வேண்டாம் நிச்சயம் நடக்கும்.

உடன் வந்தவர் : (பாடுகிறார்)...

பாட்டு : கடவுளே வருகிறார் – மனித
உருவிலே வருகிறார்
மனமோடு பேசுகிறார்
மகிழ்வோடு ஆடுகிறார் (கடவுளே)
நல்லவர்க்கு உதவிகள் செய்ய
மனிதனாய் வருகின்றார் – தெய்வப்
புனிதனாய் வருகின்றார்...
கடவுளே... உன் உருவத்தில் வந்தா லென்ன
ஆயுதம் எடுத்தாலென்ன...?
அனைத்தையும் அழித்தாலென்ன...? (கடவுளே)

(வேறுகுரல்) யாவர்க்கும் தீங்கு செய்யும் பண்பாளர் மிருகமடா
யாவர்க்கும் தீங்கு செய்ய எண்ணாதோர்
மனிதனடா
யாவர்க்கும் உதவி செய்ய எண்ணுவோர்
தெய்வமடா (கடவுளே)

## காட்சி - 13

(ராமலிங்கம் தலையை தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். அவருடைய அண்ணியும் அண்ணன் சபாபதியும் நின்று கொண்டிருக்கிறார்கள்)

சபாபதி : *ராமலிங்கம், உங்கிட்ட இவ்வளவு தூரம் எடுத்துச் சொல்லியும் இணங்க மாட்டீங்கறியே. வாழ்க்கைய தனியாவே ஓட்ட முடியாதுப்பா... ஒரு துணை வேணும். அதுவும் உன்னோட அத்தை மகள் தனகோட்டியை தானே வாழ்க்கைத் துணையா ஏத்துக்கச் சொல்றோம்... உன்னை நல்லா புரிஞ்சவ தானேப்பா அவ...*

ராமலிங்கம் : *அண்ணா என் மனசில திருமணங்கறதைப் பத்தி நெனச்சுப் பாக்கவே முடியலயே அண்ணா. எப்பவுமே இறைவனைப் பத்தியே நெனச்சுக்கிட்டிருக்கிறேன்...*

சபாபதி : *தம்பி, இறைவன் இறைவன்னு சொல்றியே அந்த இறைவன் எங்கே இருக்காரு... சொல்லு பாப்போம்...*

ராமலிங்கம் : *இறைவன் எல்லாமாய், எல்லோருமாய், எங்கேயும் நெறஞ்சு இருக்கார்...*

சபாபதி : *இறைவன் எந்த உருவத்தில் இருக்கார்?*

ராமலிங்கம் : *எல்லாம் வல்ல பரம் பொருள் பரம அணுக்களாப் பிரிஞ்சு, அது சுழற்சியாகி நுண்ணிய பரமாணு வடிவுல இருக்கு. இந்த பரமாணுவெல்லாம் ஒன்னோட ஒன்னு இணைஞ்சு உயிர்களாவும்,*

பொருள்களாவும் இருக்கு... நாம பாக்கறது கேக்கறது எல்லாம் இறைவனே...

சபாபதி : அதாவது விண்ணைப்பத்தின ஞானம் விண்ஞானம். அதாவது விஞ்ஞானம். அதாவது இறைவனைப்பத்தின ஞானம் விஞ்ஞானம் அப்படித்தானே... அப்ப. மெய்ஞானமுனா என்ன...?

ராமலிங்கம் : விஞ்ஞானம் விரிவடைஞ்சால் மெய்ஞானம்.

சபாபதி : மெய்ஞானத்துக் கெல்லாம் நாம போக வேண்டாம். விஞ்ஞானத்து அடிப்படையிலே நான் பேசுறேன்... விண் அப்படீங்கற அணுக்களின் கூட்டம் பல விதங்களில் இணையற போது பல வித தோற்றம் ஏற்படுதுனு சொன்னீயல்ல...

ராமலிங்கம் : ஆமா !...

சபாபதி : அதுனாலதான் தூணிலும் இருக்கான் துரும்பிலேயும் இருக்கான் இறைவன்னு பிரகலாதன் சொன்னான் இல்லையா...

ராமலிங்கம் : ஆமா...

சபாபதி : அப்படீனா உன்னில் இருக்கிற இறைவன் என்னிடத்திலும் உன் அண்ணியிடத்திலயும் எல்லோரிடத்திலும் இருக்கிறான் இல்லையா...

ராமலிங்கம் : ஆமா, நிச்சயமா எல்லாரிடத்திலயும் இருக்கிறான் இறைவன்.

சபாபதி : அந்த . இறைவன் தனக்கோட்டியிடத்திலயும் இருக்கிறான்... அப்படித்தானே...!

ராமலிங்கம் : அப்படித்தான்!

சபாபதி : இறைவனோட இணைஞ்சு இருக்க விரும்பறேன்னு சொல்றியே... அப்படீனா தனக்கோட்டியோட இணைஞ்சு இருக்கிறதும் இறைவனோட இணைஞ்சு இருக்கறதும் ஒன்னுதானே...

ராமலிங்கம் : ஒரு பெண்ணோட இணைஞ்சு இருக்கிற மனநிலை எனக்கு இல்லை...

சபாபதி : இறைவன் எல்லாரிடத்திலயும் இருக்கிறான் அப்படீனு நீ சொன்னது உண்மைனா, பொம்பளையிடத்தும் ஆம்பளையிடத்தும் இருக்கான்... பொம்பளைகிட்ட இருக்கிறது பொம்பளை இறைவன், ஆம்பளைகிட்ட இருக்கிறது ஆம்பளை இறைவன், அப்டீங்கறது இல்லையல்லவா...

ராமலிங்கம் : இருந்தாலும்...

சபாபதி : என்ன இருந்தாலும்...? நீ தனக்கோட்டியை ஏற்றுக்கொள்ள மறுப்பதும் இறைவனை ஏற்றுக்கொள்ள மறுப்பதும் ஒன்னுதான்...

ராமலிங்கம் : நான் கண்ணாடி தவத்தில் இறைவனோடு ஒன்றாகக் கலந்தவன் அண்ணா...

சபாபதி : நீ கண்ணாடி தவத்திலே இறைவனோடு ஒன்னா கலந்தேன்னு சொல்றே... கண் நாடித் தவத்திலே தனக்கோட்டியோட ஒன்னா இணைஞ்சா...

அதுவும் திருமணத்தின் மூலம் இணைஞ்சா கூட இல்லே... அது கண்ணாடி தவம் - இது கண்ணாடி தவம்...

ராமலிங்கம் : (மௌனம்)

சபாபதி : இறைவனோடு நேரிடையா பெறுவது பேரின்பம் இறைவனின் கூறாக இருக்கும் உயிர்களோடு தொடர்பு கொண்டு பெறுவது சிற்றின்பம்... கடையில் பெரிய சோப் இருக்கும் அதை நாம வாங்க வேணுமுங்கறதுக்காக சேம்பிள் சோப் கொடுக்கிறாங்க... இதை வாங்கி உபயோகிச்சு இதுவே இவ்வளவு நல்லா இருக்கே அப்ப பெரிய சோப் வாங்கலாமுனு நாம வாங்கற தில்லையா? அது போல சிற்றின்பமே எழுத்தால விவரிக்க முடியாம இருக்கறதுனால பேரின்பம் எவ்வளவு புளகாங்கிதமா இருக்குமுனு நெனச்சு மேலும் மேலும் இறை உணர்வை வளர்க்கத் தோணும்.

ராமலிங்கம் : (மௌனம்)

சபாபதி : என்ன ராமலிங்கம் நான் பாட்டுக்கு சொற்பொழிவு மாதிரி பேசிக்கிட்டே போறேன்... நீ பேசாமலேயே இருக்கியே...

ராமலிங்கம் : எல்லாம் இறைவன் சித்தம் அண்ணா...

சபாபதி : இன்னும் ரெண்டு நாள்லேயே கல்யாணத்தை வெச்சுக்கலாமுனு நினைக்கிறேன் என்ன சொல்றே தம்பி...?

ராமலிங்கம் : எல்லாம் இறைவன் சித்தம்... நான் சொல்றதுக்கு என்ன இருக்கு அண்ணா...

அண்ணியார் : என் மனசுல பால் வார்த்திட்டீங்க தம்பி. எல்லாம் இறைவன் சித்தம்தான் தம்பி...

## காட்சி - 14

(ராமலிங்கம் முதலிரவுக்கான அறையில் இருக்கிறார். தனக்கோட்டியை அலங்கரித்து அனுப்புகின்றனர்)

தோழிகள் : தனக்கோட்டி, தூங்கிடாதே! இன்னிக்கி ராத்திரி முழுதும் முழிச்சிட்டிருக்கணும்! அவர் தூங்க ஆரம்பிச்சாலும் நீ அவரை தூங்க விடக் கூடாது... எதையாவது கேள்வி கேக்குற சாக்குல பேச்சுக் கொடுத்துக்கிட்டேயிரு.... இந்த பாரு, இப்படி கிழவியாட்டம் உடம்பை எல்லாம் துணியைப் போத்தி மறைச்சிட்டே இருக்காதே....

தனக்கோட்டி : சீ, போங்கடீ !...

தோழிகள் : நாங்க போகாம இங்கயேவா நின்னுக்கிட்டுருக்கப் போறோம்... நீ பாத்துப் போம்மா கண்ணு... ஏய், ராத்திரி முழுக்க தூங்காதே...!

(தனக்கோட்டி உள்ளே போகிறார். ராமலிங்கம் சாந்தமாக அமர்ந்திருக்கிறார்)

ராமலிங்கம் : தனக்கோட்டி ஏன் நிக்கற... இங்கே வா... இப்படி உட்கார்... இந்த புத்தகத்தைப் பார்... இது என்ன புத்தகம்...?

தனக்கோட்டி : திருவாசகம் மாமா...

ராமலிங்கம் : திருவாசகத்துக்கு உருகார் ஒருவாசகத்துக்கும் உருகார்... இந்தா இதைப் படிச்சுப்பார் (திருவாசகத்தைக் கொடுக்கிறார்) (தனக்கோட்டி படிக்கிறாள்)

தனக்கோட்டி : மாமா, திருஞானசம்பந்தர் முதல் பாட்டில் தோடுடைய செவியன் விடையேறி யோர் தூவெண் மதிசூடிக் காடுடைய சுடலைப் பொடி பூசி என்னுள்ளங் கவர் கள்வன் அப்படினு எழுதியிருக்காரே இதுக்கு என்ன அர்த்தம் மாமா...

ராமலிங்கம் : சிவ பெருமான் தன் துணைவியான உமாதேவியாரை தன் இடப்பாகத்தில் ஏற்றிருக்கிறார். அவர் இடப்பாகம் முழுதும் உமாதேவியார் இருப்பதால் இடது காது உமாதேவியாருக்குச் சொந்தம் அதுனாலதான் உமாமகேஸ்வரனான சிவ பெருமானை தோடுடைய செவியன்னு எழுதியிருக்கார்.

தனக்கோட்டி : மாமா சுடுகாட்டில் சாம்பலைப் பூசும் ஒருவர்கூட மனைவியை தன்னோட இணைச்சதும் அதுக்கு அடையாளமா தோட்டை அணிஞ்சதையும் பாக்கறப்போ திருவாசகம் தன் அடியார்கள் மனைவிய எப்படி நடத்தனுமுனு தெளிவா சொல்லுது பாத்தீங்களா...

ராமலிங்கம் : அப்படியில்லை தனக்கோட்டி... ஒருவன் எப்போதும், எந்த போதும் பெண்ணோடு இணைஞ்சு இருக்கறவனா இருந்தாலும் அவன் சுடுகாட்டுச் சாம்பலைப் பூசுற அளவுக்கு ஒட்டுறவு இல்லாதவனாக அதாவது நிஷ்காமிய கருமம்

உள்ளவனாக இருக்கனுங்கறதுக்காகத்தான் தோடுடைய செவியன், சுடலைப் பொடி பூசிய கள்வன் அப்படீனு எல்லாம் ஞானசம்பந்தர் எழுதியிருக்கார்.

தனக்கோட்டி : மாமா அறுசுவையில இனிப்பும் காரமும் இருக்குது. அறுசுவை உணவு சாப்பிடுறேனு எல்லாத்தையும் ஒன்னாப் பிணைஞ்சு சாப்பிடறதில்லை. இனிப்பை முதல்ல சாப்பிட்டுட்டு அப்புறம் காரத்தை சாப்பிடுவாங்க. ஒன்னு ஒன்னா சாப்பிடும் போது அதை மட்டுமே ரசிக்கனும்... ருசிக்கனும். அப்புறம் அடுத்ததைச் சாப்பிடும் போது அதுலயே ரசிச்சு ருசிக்கனும் அதைப் போலத்தான் இன்பமும்...

ராமலிங்கம் : தனக்கோட்டி நீ புத்திசாலித்தனமா வாதம் பண்ணி என்ன சொல்ல வர்றேனு புரியுது. அந்த மனநிலையை எல்லாம் தாண்டி உசந்து போய் இறைநிலையோட என் மனம் ஐக்கியமாயிட்டுது. நீயும் என் அளவுக்கு உயரவேணும்...

தனக்கோட்டி : செடி முளைக்கும் போதே பழம் பழமாக் காய்க்கனுமுனு நீங்க நெனைக்கறது நியாயமா மாமா... சரி, மாமா நீங்க என்னைய என்ன செய்யனுமுனு எதிர்பாக்கறீங்க...

ராமலிங்கம் : ஒன்னும் செய்ய வேணாம். நீ அப்படியே படுத்துக்க.

தனக்கோட்டி : சரி மாமா... எனக்கு ரொம்ப சந்தோசம் மாமா... அத அப்பவே சொல்லியிருக்கலாமல்ல மாமா...

ராமலிங்கம் : உனக்கு தூக்கம் வர்ர வரைக்கும் நான் திருவாசகம் படிக்கிறேன் நீ அப்படியே தூங்கிரு... தினமும் இப்படியே திருவாசகம் படிச்சிட்டே தூங்கீரலாம்.

தனக்கோட்டி : அப்படியா மாமா... திருவாசகத்துல சுவை இருக்குதோ இல்லையோ உன் பேச்சைக் கேட்டுகிட்டு இருக்கிறதே சுவைதான் மாமா நீ பேசினாலும் சரி பாடினாலும் சரி உன் குரலைக் கேட்டுக்கிட்டே அப்படியே தினமும் தூங்கிர்றேன்...

ராமலிங்கம் : (பாட ஆரம்பிக்கிறார்) காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி...

## காட்சி - 15

(சபாபதி அமர்ந்திருக்கிறார். சபாபதியின் மனைவி வருகிறார்)

சபா. மனைவி : என்னங்க இப்படி உக்காந்திருக்கீங்க... வெளியில பையனுக வாழை மரத்தைப் பிச்சுக்கிட்டுருக்கானுக. அதப்பாக்க கூடாதாங்க... டேய் எவன்டா அவன் வாழை மரத்தை பிய்க்கிறது... கை காலை ஒடிச்சுப் போடுவேன், ஜாக்கிரதை (வேகமாக போகிறாள் மீண்டும் வருகிறாள்)

சபாபதி : ஏன் இப்படி அலட்டிக்கிறே... இன்னைக்கோட கல்யாணம் முடிஞ்சு மூணு மாசம் ஆகுது வாழை மரம் காய்ஞ்சு போச்சு.. பையனுக பிச்சுப் போட்டா போட்டுட்டுப் போறானுக, அதுக்காக ஏன் இப்படி அலட்டிக்கிறே...

சபா. மனைவி : என்னங்க மூணு மாசம் ஆனது தெரியலை பாத்தீங்களா... இப்பத்தான் பதினஞ்சு நாள் ஆனது மாதிரி தெரியுது...

(தனக்கோட்டி வருகிறார் வரும் போது வாந்தி எடுத்துக் கொண்டே வருகிறார்)

சபாபதி : என்னம்மா தனக்கோட்டி ஏன் வாந்தி எடுக்கற... என்ன சாப்பிட்டே...?

சபா. மனைவி : நீங்க சும்மா சித்த இருங்க. இது மசக்கை வாந்திங்க. இவ உண்டாயிருக்கிறா... நம்ம ராமலிங்கத்து வாரிசு வரப் போகுதுங்க

சபாபதி : அடேடே, அப்படியா ரொம்ப ரொம்ப சந்தோஷம்., அப்படியாம்மா...?

தனக்கோட்டி : அப்படியெல்லாம் ஒன்னுமில்லை மாமா.

சபா. மனைவி : என்ன ஒன்னுமில்லை மாமா...? எங்க போயி இதை எல்லாம் சின்னஞ்சிறுசுகிட்டே கேக்கலாமா...? நீ போம்மா... போய் பேசாம படுத்துக்க... ஒரு வேலையும் செய்ய வேணாம்...

தனக்கோட்டி : அத்தை எனக்கு ஜீரணம் ஆகலை... அதுனாலதான் வாந்தி... வேறொன்னும் இல்லை...

(தனக்கோட்டியின் தோழி வருகிறாள்)

தோழி : நான் நேத்து தனக்கோட்டிக்கு வடை கொண்டுவந்து கொடுத்தேன். எண்ணைக் கக்கம் அடிச்சுக்கிட்டே இருந்துச்சு. அப்பவே எனக்கும் குமட்டுச்சு... இதுவரைக்கும் எனக்கும் மூணு தடவை வாந்தி வந்திருச்சு. அதோட இன்னொரு விஷயம்...

சபா. மனைவி : என்ன அது விஷயம்...?

தோழி : கல்யாணம் ஆன நாள்லேருந்து இன்னிக்கு வரைக்கும் தினமும் ராத்திரியிலே தேவாரமும் திருவாசகமும்தான் படிச்சுக்கிட்டு வர்றாங்களாம்... இன்னும் ஏதும் நடக்கலையாம்... இது நீங்க நெனைக்கிற வாந்தியில்ல.

சபா. மனைவி : அப்படியா தனக்கோட்டி... இதை ஏன் இதுவரைக்கும் எங்கிட்ட சொல்லலை...?

தோழி : இதைப்போயி பெரியவங்ககிட்ட யாராச்சும் சொல்வாங்களா...

சபா. மனைவி : ஏன் தனக்கோட்டி இதெல்லாம் உண்மையா...? (தனக்கோட்டி ஆமாம் என்பதற்கு அடையாளமாக வெட்கத்துடன் தலை தாழ்த்துகிறாள்) என்னங்க தம்பி என்ன சாமியார்னு நெனப்பா...

சபாபதி : இப்ப சிலப்பல சாமியாருக்கும் பலப்பல மாமியார் இருக்கிற காலத்துல தம்பி இப்படி இருக்கானே...

சபா. மனைவி : தம்பி சில சமயத்துல பிரம்மை பிடிச்ச மாதிரி ஒக்காந்திருக்குதுங்க...

சபாபதி : பிரம்மை பிடிச்ச மாதிரியில்ல பிரம்மம் புடிச்ச மாதிரி... அதாவது கடவுள் புடிச்ச மாதிரி... கடவுளோடு ஒன்றிட்ட மாதிரி.

சபா மனைவி : என்னமோ தம்பியை புடிக்கட்டும். ஒரு பெண்ணோட வாழ்க்கையை வீணாக்கிட்டோமே...

தனக்கோட்டி : இல்ல அத்தே... இப்பத்தான் என் வாழ்க்கை முழுமை அடைஞ்சமாதிரி இருக்குது... எனக்கு இது ரொம்பவும் மன நிம்மதியா இருக்குது.

சபா. மனைவி : அய்யய்யோ! என்னங்க இது... இவளுக்கும் பிரம்மை புடிச்சிருச்சுங்க...

சபாபதி : புடிக்கட்டும் புடிக்கட்டும் பிரம்மை புடிச்சா நல்லதுதான்

சபாபதி : அய்யய்யோ உங்களுக்கும் பிரம்மை புடிச்சிருச்சா...?

## காட்சி - 16

கந்தசாமி : (தொண்டையைப் பிடித்துக் கொண்டே வருகிறார்) தொண்டை... தொண்டை... தொண்டை...

முத்து : என்ன கந்தசாமி தொண்டையில் என்ன?

கந்தசாமி : தொண்டையில் ஒன்னுமில்லே தொண்டை மண்டலமா, ... தொண்ட மண்டலமா...?

முத்து : அட, இதுக்குத்தான் இத்தனை ஆர்ப்பாட்டம் செஞ்சியா... பெரிய பெரிய அறிஞர்களெல்லாம் சேர்ந்து விவாதம் பண்ணியும் முடியலை. நம்ம ராமலிங்கம் கிட்டே வந்து எது சரினு கேட்டாங்க. கேட்ட உடனே தொல்காப்பியத்துல இருந்து உதாரணங்களைக் காட்டி அது தொண்ட மண்டலம் தான்னு நிரூபிச்சார்... அதோட தொண்ட மண்டல சதகம்ங்கற பேருல ஒரு சதகமும் எழுதி பதிப்பிச்சாரு

கந்தசாமி : அப்படியா... சரி நான் போயிட்டு வர்றேன்...

முத்து : என்ன அவசரம்...? எங்கே...?

கந்தசாமி : தேருரில் சின்ன சின்ன குமரிப் பொண்ணுங்களெல்லாம் இனிமையான தொண்டை யோட பாடி ஆடறாங்கலாம்... போய்ப் பாக்கணும்.

முத்து : சீச்சீ! இந்த வயசில உனக்கேன்யா இந்த புத்தி....

கந்தசாமி : ஏற்கனவே இவங்க ஆடிப் பாடறதைக் கேட்டிருக்கேன் ஒன்னும் நீ நெனைக்கிற மாதிரி அசிங்கமா வெல்லாம் இருக்காது. நம்ம ஜனங்க கூட சேர்ந்து ஒருத்தர் பாடுறான் பாரு பாட்டு அது அற்புதம். நல்லா ரசிக்கலாம்...

முத்து : அற்புதமா... அது என்ன பாட்டு. அப்படி அற்புதம்? நீ எதைப் பத்தி பேசினாலும் ஒரு தூக்கு தூக்கித் தான் பேசுவ... கொஞ்சம் நாள் கழிச்சு அதையே ரொம்பவும் தாழ்த்திப் பேசுவ. உன்னைப் போல ரொம்ப பேரு இருக்காங்க.. அதுசரி அது என்ன பாட்டு... பாடு பார்க்கலாம்...

கந்தசாமி : பாடட்டுமா... பாட்டு முடியற வரைக்கும் நிறுத்தச் சொல்லக்கூடாது.

முத்து : இல்லை... நான் நிறுத்தச் சொல்லலை. நீ சும்மா பாடு!

கந்தசாமி : (பாடுகின்றார்)

சொர்க்கத்துக்கு போகணுமா சுகமாக இருக்கணுமா
வெக்கத்துக்கு தூக்கமில்லை விளையாடு முடிஞ்ச மட்டும்
(சொர்க்கத்துக்கு)

வயசைப்பத்திக் கவலை யில்லே
வருஷம் தோறும் வயசு ஏறும்

மங்கை மேனி சுகத்தைத் தேடு
தங்கமேனி உனது பாரு (சொர்க்கத்துக்கு)

பருவங்கள் அதிக நேரம்
காத்திருக்க நாயமில்லை
உருவங்கள் சிதைந்த பின்னால்
உன்னாலே முடியாதப்பா
பருவங்கள் உள்ளமட்டும்
பார்க்கமட்டும் பார்த்துப் போடு
துருவங்கள் இணைய வேண்டும்
மின்சாரம் பாய வேண்டும்
மின்சாரம் பாஞ்சாத்தானே
உடம்பெல்லாம் கிளுகிளுக்கும்...
(சொர்க்கத்துக்கு)

கனவே வா என் அழகே வா
அருகே வா நான் அணைப்பேன்வா
தேனே வா கனியே வா
மானே வா என் உயிரே வா... (சொர்க்கத்துக்கு)

முத்து : யோவ்... யோவ்... யோவ்... நிறுத்து! நிறுத்து நிறுத்து!

கந்தசாமி : நிறுத்தற தென்ன பாட்டை பூராவும் பாடி முடிச்சுட்டேனே!

முத்து : நிறுத்திட்டீயா..? இங்க ஒரு சாக்குச்சித்தர்னு ஒருத்தர் இருக்கார் அவரு பாடின பாட்டைப் பாடிக் காட்டட்டுமா...?

கந்தசாமி : சித்தரா...? சித்தர் பாட்டுக்களை நிறைய நானும் படித்திருக்கேன். எங்கே எங்கே பாடு பார்க்கலாம்.

முத்து : (பாடுகிறார்)

உலகத்தை ஆள்வதெல்லாம்
ஒருபுறத்தில் இருக்கட்டும்
உன்னைநீ ஆண்டாயா
உத்தமனாய் வாழ்ந்தாயா..? (உலகத்தை)
மலசலங்கள் பாய்கின்ற
மனித உடல் சுவைத்தவனே
மாய்மாலம் பெண்களடா
பயங்கரத்தின் சுரங்கமடா
கலகங்கள் வருவதெல்லாம்
கடைக் கண்ணின் பார்வையினால்
கரையேற முடியாமல்
கதறிடுவாய் மங்கையினால் (உலகத்தை)

விச்சம் எடுத்த நீரை
நாற்றம் எடுத்த சொம்பில்
ஊற்றி வைத்த தையா
உன்னைக் கவரு தையா (உலகத்தை)

தேனென்றும் மானென்றும்,
திரை மூடும் சொர்க்க மென்றும்
வினையற்ற குழிதோண்டி
விழுகின்றார் ஐயோ அம்மா (உலகத்தை)

கந்தசாமி : நிறுத்து! நிறுத்து! இது சித்தர் பாட்டு இல்லை உன் சொந்தப் பாட்டு அப்படித்தானே!

முத்து : அப்படியே தான்!

கந்தசாமி : ராமலிங்கம் வர்றார்!... ராமலிங்கம் வர்றார்!

ராமலிங்கம் : நான் உங்க ரெண்டு பேர் பாட்டையும் கேட்டுக்கிட்டுத்தான், இந்த மரத்தடியிலேயே உட்கார்ந்திருந்தேன்.

கந்தசாமி : தப்பா இருந்தா மனசில வைச்சுக்காதீங்க...

ராமலிங்கம் : நீங்க பாடின ரெண்டு பாட்டுமே சரிதான்... குடும்பத்தை விட்டுவிட்டு காட்டுக்கு போகணும்கறதும் தப்பு. அதே போல பெண்களே சொர்க்கம்ங்கறதும் தப்பு. சுடுகாட்டை நினைச்சு வீட்டை மறக்காம வீட்டிலேயே இருந்துகிட்டே இறைவனின் நினைப்பிலே வாழலாம். சாப்பாட்டுக்கு உப்பும் ஊறுகாயும் வேணும் - ஆனா உப்பையும் ஊறுகாயையும் மட்டுமே சாப்பிட்டுக்கிட்டு உட்கார்ந்திருக்கக் கூடாது.

முத்து : குடும்ப வாழ்க்கையையும் அளவோட வெச்சுக்கணும்னு சொல்றீங்களா?

ராமலிங்கம் : அதேதான் அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு!

## காட்சி - 17

(தொழுதூர் வேலாயுத முதலியார் கையில் ஒருகற்றைத் தாள்களுடன் வருகிறார். உடன் ஒருவர் வருகிறார்)

உடன் வருபவர் : ஐயா எனக்கென்னமோ இது சரியாத் தோணலை. அவர் தமிழில விபரம் அறிஞ்சவர்... உண்மையை அவர் கண்டுப்பிடிச்சுட்டா நமக்கு சங்கடமாகப் போயிடும்.

தொ. வேலாயுதம் : அதெல்லாம் நடக்காதப்பா... நான் இத்தனை வருஷம் சங்ககாலப் பாடல்களைப் படிச்சிக்கிட்டு வர்றேன். என்னாலேயே எல்லா சங்ககாலப் பாடல்களையும் படிச்சு ஞாபகத்துல வைச்சுக்க முடியல... இவரு எந்தப் பள்ளிக் கூடத்துல படிச்சார்? ஒரு பள்ளிக் கூடத்துலயும் படிக்கலை... நீயே பாரேன் என்னைப் போல கல்வியில கரை கண்டவங்களாலேயே கண்டுபிடிக்க முடியாது இவரு என்ன கொசு! இவரு வேஷத்தை இன்னைக்கு நான் கலைக்கப் போறேன் பாரு...

உடன் வருபவர் : அப்படியே இருந்தாலும் உங்க மாதிரி ரொம்பப் படிச்சவங்க இப்படிச் செய்யாலாமுங்களா? அடுத்தவங்களை காரணமில்லாம அவமான படுத்தலாமுங்களா...?

தொ. வேலாயுதம் : அட, நீ ஒன்னு! பூனைக்கு யாராவது மணி கட்டித்தானே ஆகனும். நான் கட்டறேன்... அந்தப் பூனைக்கு... இந்த மணியை! இனிமேலாவது ராமலிங்கம் பெரிய அறிவாளினு யாரும் சொல்ல மாட்டாங்களல்லவா?

உடன் வந்தவர் : ஐயா ராமலிங்கம் வந்தாச்சு (பின் பாட்டு கேட்கிறது)

(பாட்டு)

ஏதுமறியாத சின்னப் பயலுக்கும்
சின்னவன் நான்
சூது அறியாத குழந்தைகட்குக்
குழந்தையே நான் (ஏதுமறியாத)

*உயர்ந்தவன் என்று எண்ணவில்லை*
*ஓது கல்வி கற்கவில்லை*
*ஒரு வித்தை படிக்கவில்லை*
*உல்லாசம் அறிந்ததில்லை*
*மாதுவாசம் அறியவில்லை*
*மதுரசத்தைப் பார்த்த தில்லை*
*ஆகையினால் அண்ணாச்சி (ஏதுமறியா)*
*தெருவிலே போகும் போது*
*நடுவிலே போக மாட்டேன்*
*கருவிலே இருப்பது போல்*
*ஒடுக்கமாய் நடப்பேன் அப்போ*
*அருவமாய் இருக்கும் தெய்வம்*
*அனைத்திலும் கண்டேன் கண்டேன்*
*அருகிலே தெய்வம் கண்டேன் –*
*அதிலேயே மூழ்கிவிட்டேன் (ஏதும் அறியா)*

*(தொழுதூர் வேலாயுத முதலியார் ராமலிங்கம் எதிரில் போய் நிற்கிறார். ஆணவம் காரணமாக, முதலியார் வணக்கம் செலுத்தவில்லை. ஒருவரை ஒருவர் பார்த்தவாறு நிற்கின்றனர். ராமலிங்கம் வணக்கம் தெரிவித்துப் பேசுகிறார்)*

*ராமலிங்கம் : வாங்க, வணக்கம்!*

*தொ. வேலாயுதம் : தம்பி, உங்கிட்ட ஒரு அபிப்ராயம் கேட்டுட்டுப் போகலாம்னு வந்தேன்...*

*ராமலிங்கம் : வாங்க முதல்ல உட்கார்ந்து பேசுவோம் (உட்காருங்கள்)... நீங்க யாருனு தெரிஞ்சுக்கலாமா...?*

தொ. வேலாயுதம் : என்னைத் தெரியலையா... ஹி... ஹி... என்ன தம்பி என்னைத் தெரியலைனு சொல்றியே நான் புகழ் பெற்ற பெரிய வித்வான் ஸ்ரீமான், தொழுதூர் வேலாயுத முதலியார்...!

ராமலிங்கம் : அப்படியாங்க! உங்களைச் சந்திச்சதுல எனக்கு ரொம்பவும் மகிழ்ச்சி! கையில் என்னமோ கொண்டு வந்திருக்கீங்களே!

தொ. வேலாயுதம் : ஓ... அதுவா! இதெல்லாம் சங்க காலப் பாடல்கள் இதுல நூத்து அம்பது பாடல்கள் இருக்கு.. இதுல இருந்து ஒரு நூறு நல்ல பாடல்களை நீ தேர்ந்தெடுத்துக் கொடு தம்பி, அதை நூல் வடிவில போடலாமுனு நெனைக்கிறேன்.

(கற்றையை நீட்டுகிறார் ராமலிங்கம் அதை வாங்கிக் கொள்ளுகிறார். பின்பு பிரித்து படிக்கிறார்)

ராமலிங்கம் : (பொறுமையுடன் அந்தக் கற்றையை கையில் மடித்துக் கொண்டு) இதெல்லாம் எந்தப் பாடல்கள்னு சொன்னீங்க...?

தொ. வேலாயுதம் : சங்க காலப் பாடல்கள்!

ராமலிங்கம் : இந்தப் பாடல்களெல்லாம் தமிழ் சரிவரக் கற்காத கற்றுக்குட்டிப்பயல் எவனோ எழுதின பாடல்கள். இவை ஒன்னுகூட சங்க காலப் பாடல்கள் அல்ல... இது உங்களுக்கே நல்லா தெரிந்திருக்குமே...!

(தொழுதூர் வேலாயுத முதலியார் எழுந்து தன் அங்கவஸ்திரத்தை இடுப்பில் கட்டிக் கொண்டு ராமலிங்கம் கால்களில் நெடுஞ்சாண் கிடையாக விழுகிறார்)

தொ. வேலாயுதம் : ஐயா ஞானசம்பந்தப் பெருமானே! இவ்வளவு சின்ன வயசில இவ்வளவு ஞானமும் அறிவும் எப்படி ஐயா வந்தது...? அத்தனை பாடல்களும் நானே முயற்சி செஞ்சு பலநாள் கஷ்டப்பட்டு சங்ககாலப் பாடல்கள் மாதிரி எழுதினேன் கண்டுபிடிச்சுட்டீங்களே...! ஐயா என்னை மன்னிச்சிருங்க...!

ராமலிங்கம் : நீங்க பெரியவங்க மன்னிச்சுருங்கன்னு எல்லாம் சொல்லக்கூடாது...!

தொ. வேலாயுதம் : யார் பெரியவங்க...? நானா...? சொக்கத்தங்கத்தை உரசிப் பார்க்க கல்லைக் கொண்டு வந்தேனே!

உடன் வந்தவர் : தங்கத்தை உரசிப் பார்க்க தங்கத்தை யாரும் கொண்டுவர மாட்டங்க... கல்தான் வேணும் தங்கத்தை உரசிப் பார்க்க...

தொ. வேலாயுதம் : உண்மைதான்... எல்லோர் வாழ்க்கையிலும் நம்ம மதிப்பைக் குறைக்க தரம்தாழ்ந்தவங்க முயற்சிப்பாங்க. அப்பத்தான் நம்ம உயர்ந்த தரமும் வெளிப்படும்.. அடுத்தவன் உரசினா சந்தோசப்பட்டுக்கணும் கோபிக்கக் கூடாது... ஐயா, ஒரு விண்ணப்பம்...

ராமலிங்கம் : என்னங்க ஐயா...?

தொ. வேலாயுதம் : நீங்க என்னை இன்னைக்கு இருந்து உங்க சிஷ்யனா ஏத்துக்கணும்...

ராமலிங்கம் : எனக்கு நீங்க சிஷ்யனா...? அப்படி இருக்கிற அளவுக்கு நான் என்னை பெரிய ஆளா நினைக்கலை... நீங்க என்னோட இருந்து தமிழ்த்

தொண்டு செய்யலாம். அதற்கு உங்களை வரவேற்கிறேன்.

**தொ. வேலாயுதம் :** தண்ணி நெறஞ்ச நிறைகுடம் தழும்பறதில்லை... ஐயா நீங்க என்ன சொன்னாலும் சரி இன்னைக்கு இருந்து நான் உங்க சிஷ்யன்தான். மதுரகவி ஆழ்வார் குருவை தேடி அலைஞ்ச மாதிரி நானும் அலைஞ்சு இன்னைக்கு ஒரு குருவை கண்டுபிடிச்சுட்டேன்...

**ராமலிங்கம் :** உங்க விருப்பம் அதுவானால் நான் சொல்ல என்ன இருக்கு...?

**தொ. வேலாயுதம் :** ஐயா, எனக்கு முதல் வேலையா தாங்கள் எழுதின மகாதேவமாலை, இங்கிதமாலை போன்ற அருட்பாக்களை தொகுக்குற பணியைக் கொடுங்க...

**ராமலிங்கம் :** சரி அப்படியே உங்கள் இஷ்டம் போல் செய்யுங்க...!

**தொ. வேலாயுதம் :** நன்றி ஐயா...

(தொழுதூர் வேலாயுத முதலியார் மீண்டும் ஒருமுறை ராமலிங்கம் கால்களில் விழுகிறார்)

**ராமலிங்கம் :** ஐயா, காலில எல்லாம் விழக் கூடாது... காலில விழுகிறவங்க முட்டாள்கள், காலில விழ அனுமதிக்கிறவங்க அதைவிட மிகப் பெரிய முட்டாள்கள்னு நான் நினைக்கிறவன்... காலில் விழுற கலாச்சாரத்தை கடைப்பிடிக்கறவங்க கசடர்கள். காரியம் சாதிக்க அவர்கள் பயன்படுத்தும் சந்தர்ப்பவாதம். நீங்கள்லாம் உயர்ந்தவர்கள். அதை செய்யக்கூடாது.

## காட்சி - 18

(கந்தசாமி மிகவும் சோர்ந்து போய் நடந்து வருகிறார்)

கந்தசாமி : *(மிகவும் ஈனமான குரலில்) ஐயோ... அம்மா... ஐயோ (தள்ளாடுகிறார்)*

முத்து : *(வந்து கொண்டே) என்ன கந்தசாமி ஏன் இப்படி சோர்ந்து போய் நடக்கிறே...?*

கந்தசாமி : *என்னத்தைச் சொல்றது...? நான் வைத்தியர்கிட்டே போய் வயித்தில தண்ணியாட்டம் போறதுக்கு மருந்து கொடுன்னு கேட்டேன்... (அப்போது ஒருவர் போகிறார்) அந்தா பாரு... அந்த ஆளை விடாதே! புடி! புடி! புடி! (வந்தவர் அரண்டு போய் ஓடுகிறார். முத்து அவரைத் துரத்திப் பிடித்து வருகிறார்)*

முத்து : *எதுக்கு...? எதுக்காக இவரைப் புடிக்கச் சொன்னே...?*

பிடிபட்டவர் : *எதுக்குனு தெரியமாத்தான் என்னைத் துரத்திப் புடிச்சீங்களா?... நாடு போற நிலையைப் பாத்தீங்களா...! இதுக்கு எங்க போயி முட்டிக்கிறது...?*

கந்தசாமி : *இவருதான்... இவருதான் எனக்கு வந்த இந்த நிலைமைக்கு காரணம்... நேத்து இந்த வைத்தியர்கிட்டே போய் வயித்துல தண்ணி தண்ணியா போறதுக்கு மருந்து கொடுன்னேன். கொடுத்தார்... இப்ப தண்ணி தண்ணியாப் பீச்சி அடிக்குது.*

வைத்தியர் : என்னைத் துரத்தினது இதுக்குத் தானா?... நீங்க தான் எங்கிட்ட நேத்து மருந்து வாங்கினதா? நான் யாரோ வழிப்பறிக்காரங்களாக்குமுனு ஓடினேன்...!

முத்து : நீங்கதான் இந்த ஊருக்கு, புதுசா வந்திருக்கிற வைத்தியரா...?

வைத்தியர் : ஆமாங்க...

முத்து : நேத்து என்ன நடந்தது நீங்களே சொல்லுங்க...

வைத்தியர் : நேத்து இவரு எங்கிட்ட வந்தாருங்க. தண்ணி தண்ணியா வயித்துல பீச்சி அடிக்கறதுக்கு மருந்து இருந்தாக் குடுங்கன்னு கேட்டார். நான் இந்த ஊருக்கு புதுசா வந்திருக்கிறதுனால சீக்கிரம் நல்ல பேரு எடுக்கனும்னு நேர் வாழப் பருப்பை கை நிறைய அள்ளிக் கொடுத்தேன். அவர் முந்திரிப்பருப்பை நொறுக்கிற மாதிரி அங்கேயே சாப்பிட்டாருங்க...

கந்தசாமி : அடப்பாவி சண்டாளா...! நேர் வாழப்பருப்பையா கொடுத்தே! நான் தண்ணி தண்ணியா போறதை நிறுத்தறதுக்கு மருந்து கேட்டேன் நீ நேர் வாழப்பருப்பையா கொடுத்தே நேர் வாழப்பருப்பை சாப்பிட்டா பேதி ஏற்பட்டு பீச்சி அடிக்குமே! உன்னை நான் சும்மா விடமாட்டேன். மருந்து கொடுத்த கையை வெட்டப் போறேன். அப்படியே இந்த ஆளை நிறுத்திக்க நான் போய் அறுவாளை எடுத்துட்டு வர்ரேன்... (கந்தசாமி வெகு வேகமாய் ஓடுகிறார்)

முத்து : வைத்தியரே, நீங்க ஓடிப் போயிருங்க... அந்த ஆளு ஒரு அரைவேக்காடு... வெட்டினாலும் வெட்டிப் போடுவான். (வைத்தியர் தலைதெறிக்க ஓடி தலைமறைவாகிறார்)

கந்தசாமி : (அறுவாளுடன் வந்து கொண்டே) எங்கே அந்த வைத்தியப்பய... விட்டுட்டியா...?

முத்து : அடப் போப்பா!... நீ கேட்டதும் சரியில்லாமக் கேட்டுட்டே! அவரும் இந்தப் பக்கத்துக்காரரு இல்லை, அதுனாலதான் தப்பாப் புரிஞ்சுக்கிட்டார்... விட்டுருப்பா...!

கந்தசாமி : விட்டுட்டே இல்லே! நீ என்ன ராமலிங்கம் மாதிரி வள்ளல்னு நெனைப்பா?

முத்து : அது என்ன ராமலிங்கம் மாதிரி வள்ளல்...?

கந்தசாமி : உனக்குத் தெரியாதா? நேத்து ராமலிங்கம் சத்திரத்துல படுத்துத் தூங்கிக்கிட்டிருந்தார். அப்போ ஒரு திருடன் வந்து அவருடைய கடுக்கனைக் கழற்றினான் ராமலிங்கம் முழிச்சுக்கிட்டார் இருந்தாலும் இன்னொரு கடுக்கனையும் அவன் கழற்றிக்கட்டும்னு நினைச்சு திரும்பிப்படுத்துக்கிட்டார். திருடன் ரெண்டு கடுக்கனையும் கழற்றிட்டு போனதுக்கப்புறம் இவர் எழுந்திரிச்சு உட்காந்து "எனக்கு இந்த கடுக்கன் தேவையில்லை, இது அவனுக்காவது உதவட்டும்... என்ன பசிக் கொடுமையோ"ன்னார்.

முத்து : அப்போ! அந்த ராமலிங்கம் தூங்காமலே தூங்கினதாப் பாசாங்கு செஞ்சிருக்கார் அப்படித்தானே!

கந்தசாமி : உண்மையிலே ராமலிங்கம் பசியோட இருக்கிற ஏழைகள் பக்கம்தான். இப்பக் கூட நான் வர்ற வழியில பாத்துட்டுத் தானே வர்றேன்.

முத்து : அப்படி நீ என்னத்தைப் பாத்தே...?

கந்தசாமி : ஒரு பெரிய வீட்டில கல்யாணம் நடந்திக்கிட்டிருந்துச்சு. ராமலிங்கம் எதிர் வீட்டுத் திண்ணை ஓரத்தில் உட்கார்ந்திருந்தார் கல்யாண வீட்டுக்காரங்க ஓடிவந்து ஐயா உங்களுக்கு பத்திரிக்கை முறையாத்தானே வைச்சு அழைச்சேன்? அப்படியிருக்க ஏன் இப்படி உள்ளே வராம உட்காந்திட்டீங்க...? ன்னு கேட்டாங்க.

முத்து : அப்புறம்....?

கந்தசாமி : அதுக்கு ராமலிங்கம் இந்த ஏழைகளையெல்லாம் நீங்க உள்ளே விட மறுத்திட்டீங்க, பசியோட காத்திட்டு இருக்காங்க... நான் மட்டும் எப்படி உள்ளே வரமுடியும்ணார்.

முத்து : அடே! அப்புறம் என்ன நடந்தது?

கந்தசாமி : கல்யாண வீட்டுக்காரங்க "உள்ளே, இருக்கிறவங்க சமூகத்தில் மேல்தட்டில் இருப்பவங்களா இருக்கிறாங்க அவங்களோட எப்படீங்க இவங்களையும் உள்ளே விட முடியும்"னு சொன்னாங்க... அதுக்கு ராமலிங்கம் "நானும் சமூகத்தில் கீழ்த்தட்டிலும் கீழ்த்தட்டில்தான் இருக்கேன், நான் உள்ளே

வந்தால் உங்க கௌரவம் பாதிச்சுடும். நான் போறேன்"னு திரும்பினார்.

முத்து : அப்போ ஏழைகள்லாம் வெளியே நின்னுட்டிருந்தாங்களா...?

கந்தசாமி : ஆமா... ராமலிங்கம் திரும்பினதும் கல்யாண வீட்டுக்காரங்க இவர் காலில விழுந்து எல்லா ஏழைகளையும் உள்ளே விடுகிறோம், நீங்க உள்ளே வந்து ஆசீர்வாதம் செய்யணும்னு கேட்டுக்கிட்டாங்க. அதே மாதிரி எல்லா ஏழைகளும் உள்ளே போன பிறகு தான் கடைசியா ராமலிங்கம் உள்ளே போனார்.

முத்து : நல்லதுதான். நிறைய நன்மை செய்யுற நல்ல தலைவர்களை மறந்து அவர்களுக்கு தொடர்ந்து தொந்தரவு கொடுக்கற சமுதாயம் ஐயா இது. ஏழைகள் வயிறு நிறைஞ்சா மறந்திடுவாங்க, அவங்க வயிறு நிறையாமப் பாத்துக்கிட்டாத்தான் நம்மை நினைப்பாங்க... அதே போல நடுத்தர வர்க்கம் வசதி வந்திட்டா அதுக்கு காரணமானவங்களை மறந்திடுவாங்க.

கந்தசாமி : இது எந்தக் காலத்துக்கும் பொருந்திற பொன் மொழி மாதிரி இருக்கே... இருந்தாலும் ராமலிங்கம் இதையெல்லாம் எதிர்பார்த்து செய்யலைனு தோணுது. நல்ல சுபாவம் அவரு ரத்தத்துல ஊறியிருக்கு... அதோ... அதோ மறுபடியும் வைத்தியர் வந்திட்டான் புடி, புடி, புடி (வைத்தியர் ஓடுகிறார். கந்தசாமி வயிற்றைப் பிடித்துக் கொண்டே தள்ளாடித் தள்ளாடி ஓடுகிறார்)

## காட்சி - 19

(துலுக்கானத்தம்மன் கோவிலில் ஆடுகளும் கோழிகளும் கத்திக் கொண்டிருக்கின்றன. அவைகளைப் பிடித்துக் கட்டி வைத்திருக்கின்றனர். ராமலிங்கம் அவ்வழியே போகின்றார்)

(நின்றிருப்பவர்களில் ஒருவர் வருகிறார்)

*நின்றிருப்பவர் : ஐயா, வணக்கம்!*

*ராமலிங்கம் : வணக்கம்!*

*நின்றிருப்பவர் : நீங்க எல்லா தெய்வங்களைப் பத்தியும் பாடுறீங்க. இந்த துலுக்கானத்தம்மனைப் பத்தி ஏதாவது பாடுங்களேன்.*

*ராமலிங்கம் : நிச்சயமாப் பாடுறேன்... ஆமா ஏன் இந்தக் கோழிகளையும் ஆடுகளையும் கட்டி வைச்சிருக்கீங்க...?*

*நின்றிருப்பவர் : இந்த துலுக்கானத்தம்மனுக்கு பலியிடறதுக்குத்தான்... நம்ம பாவத்தை போக்கறதுக்கு.*

*ராமலிங்கம் : இது என்ன நியாயம்? இந்த ஆடும் கோழியும் என்ன பாவம் செஞ்சது? பாவம் செய்யறதெல்லாம் நாம, நம்ம பாவத்தைப் போக்கறதுக்கு இவைகளைப் பலியிடறதுல என்ன நியாயம்? பாவம் செஞ்சவங்களைப் பலியிட்டாலும் நியாயம் இருக்கும்?*

*வேறொருவர் : என்னங்க, நம்ம பாவம் செஞ்சா நம்மையே பலியிடச் சொல்றாரா இவரு?*

வேறொருவர் : அப்ப எதுக்குங்க ஒவ்வொரு கோவில்லயும் பலிபீடம்னு இருக்குது?

ராமலிங்கம் : நாம திருடுறோம் பொய் சொல்றோம், பொறாமைப் படறோம், அடுத்தவங்களோட எப்பவும் சண்டைக்கும் போறோம். இந்த மாதிரி கெட்ட குணங்களையெல்லாம் நாம கோவிலுக்குப் போன உடனே வெளியில - பலிபீடத்துக்கு வெளியிலேயே பலியிட்டுட்டு உள்ளே போகணும்ங்கறதுக்காகத்தான் ஒவ்வொரு கோவில்லேயும் பலிபீடம் இருக்குது...

இன்னொருவர் : பெரியவங்க ஒரு காரணமும் இல்லாமலா இவ்வளவு காலமா இந்த ஆடுகளையும் கோழிகளையும் பலியிட்டுட்டு இருக்காங்க ஏதாவது காரணம் இருக்கும்... இல்லீங்களா...

ராமலிங்கம் : அவங்களுக்கு ஆடுகளையும் கோழிகளையும் சாப்பிடனும்னு ஆசை இருந்திருக்கும். சொந்தக்காரங்களைக் கூப்பிட்டு பொங்கல் வைச்சு ஆடு கோழிகளை சாப்பிட்டுருப்பாங்க, பின்னால அறிவு வளர்ந்த உடனே, நாம உண்மை உணர்ந்தா அதை விட்டுறணும்.

ஒருவர் : இந்த ஆடுகளையும் கோழிகளையும் விட்டுவைச்சா ரொம்ப பெருகிப் போயிடும் அப்புறம் விவசாயத்துக்கு இடைஞ்சலா இருக்கும்ங்கறதுனாலயும் இருக்கலாம் இல்லீங்களா?

ராமலிங்கம் : மக்கள் தொகையும் பெருகிட்டுப் போகுது விட்டுவைச்சா நிற்கறதுக்கு கூட இடம்

இருக்காதுன்னு சொல்றாங்க... அதுக்காக... இந்த மாதிரி சிந்திச்சா என்ன ஆகும்...?

ஒருவர் : ஐயா, ஆமாங்க நாங்க இப்ப புரிஞ்சுக்கிட்டோம். நாமதான் பாவம் செஞ்சோம் இந்த ஆடு கோழிகள் என்ன பாவம் செஞ்சது...? நம்மகிட்ட, நம்மளை, பாவிகளை நம்பி நம்பி, அதுக வளருதே அதுதான் அதுக செஞ்ச பாவம்...!

ராமலிங்கம் : நீங்க இந்த கோழி ஆடெல்லாம் பலியிடாம திருப்பி அனுப்பிச்சிட்டீங்கன்னா நான் இந்த துலுக்கானத்தம்மன் மேல பாடறேன்.

அனைவரும் : ஐயா நாங்க எங்க மூடத்தன்மையை எல்லாம் உங்க முன்னால பலியிடறோம். (மக்களை நோக்கி, போங்கய்யா ஆடு கோழிகளையெல்லாம் வீட்டுக்குப் புடிச்சுட்டுப் போங்க...

(அவரவர் ஆடுகளையும் கோழிகளையும் வீட்டுக்குப் பிடித்துக் கொண்டு போகின்றனர்)

(பின்னணியில் பாடல் ஒலிக்கிறது)

ஆட்டைத் தின்னு மாட்டைத் தின்னு
அலைஞ்சு திரியும் கோழியைத் தின்னு
கூட்டத்தோடு பறந்து வரும்
கொக்கையுமே தின்னீங்க – இந்த
கூட்டை விட்டு ஆவி போனா
உங்களை யார் தின்பாங்க – (ஆட்டை)
மண்ணுக்கே இரையாகும்
மனிதர்களே பாருங்க
மத்த உயிரை நீங்க கொன்னா
என்ன வரும் கூறுங்க (ஆட்டை)

செத்த உடனே உடல் அது
பொணம்தானே உண்மைங்க
பொணத்தைத் தின்னும் பாவிகளே நீங்க,
போகும் வழி மண்ணுங்க (ஆட்டை)
உயிருக்கெல்லாம் உணர்ச்சி ஒன்றே
உண்மை இது அல்லவா
உயிர்ப் பெருக்கம், பசிதாகம்,
ஒன்றுதானே இல்லையா (ஆட்டை)
கொல்லும் போது உயிர்களெல்லாம்
சாபமிட்டு அலறுமே – நீ
செல்லும் போது அந்தச் சாபம்
உன்னைச் சும்மா குதறுமே (ஆட்டை)
ஜோதி என்றால் உயிருக்குள்ளே
இருக்கும் ஜோதித் தன்மையே
ஜோதிக்குள்ளே ஏற்றத்தாழ்வு
இல்லை இல்லை உண்மையே
ஜோதிக்குள்ளே ஏற்றத்தாழ்வு
இல்லை இல்லை உண்மையே! (ஆட்டை)

## காட்சி - 20

(ராமலிங்கம் உட்கார்ந்திருக்கிறார். ஒருவர் வருகிறார்)

வந்தவர் : ஐயா, பிரம்ம சமாஜிகள் உங்களைப் பார்க்க வந்துக்கிட்டேயிருக்காங்க...

ராமலிங்கம் : வரட்டுமே வந்து அவங்களை அவங்களே உரசிப் பாத்துக்கிடட்டுமே.

(பிரம்ம சமாஜிகள் வருகின்றனர்)

பிரம்ம சமாஜிகள் : வணக்கம் ஐயா,

ராமலிங்கம் : வணக்கம்! வாங்க! உங்களைப் பார்த்தா தெய்வங்களைப் பார்த்த மாதிரி தெரியுது.

பிரம்ம சமாஜிகள் : தெய்வங்களை எப்படி பார்க்க முடியும்? தெய்வங்களுக்கு உருவம் கொடுத்துப் பேசுறீங்களே...? தெய்வங்களை கண்ணால் பார்க்க முடியாது! உணர்ந்து பார்க்கத்தான் முடியும்.

ராமலிங்கம் : உண்மைதான்... எடுத்த உடனே அந்த நிலைக்குப் போக முடியாது. பெரிய யோக நிலையில இருப்பவங்க கூட தெய்வநிலையை உணர. தியானத்தில் உட்கார்ந்தா பலபல சிந்தனைகள் வருது. உருவம் வேண்டாம் உருவங்களை நீங்க வணங்க வேண்டாம்னு சொன்னா நூத்துக்கு ஒருத்தர் கூட ஆன்மீக சிந்தனையோட இருக்க முடியாது.

பிரம்ம சமாஜிகள் : இப்ப நாங்க வந்ததே அதுபத்தி உங்ககிட்ட பேசத்தான்... நீங்க ஒவ்வொரு கோவிலுக்கும் போயி அந்த கோவில்களில் இருக்கிற தெய்வங்களைப் பற்றி பாடல்கள் பாடறதா கேள்விப்பட்டோம். நீங்களே இப்படி செஞ்சா ஞானமில்லாத மத்தவங்க எப்படி உண்மையைத் தெரிஞ்சுக்க முடியும்...?

ராமலிங்கம் : நீங்க எந்த நோக்கத்துல எந்த கருத்தோட இங்க வந்திருக்கீங்கனு நான் முன்கூட்டியே அறிஞ்சுக்கிட்டுத்தான் உங்ககிட்டேயே பேசத் தொடங்கினேன்.

பிரம்ம சமாஜிகள் : எதையும் சொல்லாமலே உணர்ற பக்குவம் உங்களுக்கு எப்பவோ வந்திருச்சுன்னு எங்களுக்கு தெரியும்...

ராமலிங்கம் : எப்பவுமே தெய்வ சிந்தனையோட இருக்கிற, என்னாலேயே யாரும் சொல்லாமலே புரிஞ்சுக்கிற சக்தி இப்பத்தான் வந்திருக்கு... அதுவும் முழுதும் வந்திருச்சுனு நான் ஒத்துக்க மாட்டேன்...

பிரம்ம சமாஜிகள் : நீங்க உருவ வழிபாடு இல்லாமலேயே – இறைவனை மனசில் உணர்ர சக்தியால் மட்டுமே, ஒருவர் மற்றவர் மனசைப் புரியற சக்தி வந்திடுமுங்கற உண்மையை மக்கள் மத்தியில எடுத்துச் சொல்லலாமே...! இப்போது இல்லாட்டியும் இன்னும் கொஞ்ச நாளிலேயாச்சும் மக்கள் திருந்திடுவாங்க இல்லீங்களா...?

ராமலிங்கம் : மக்கள் பலபல பிரச்சினைகளில சிக்கித் தவிச்சிக்கிட்டு இருக்கிறாங்க. அவங்ககிட்டே போய் நீ இறைவனை உள்ளத்தில் உணர்வினாலேயே உணர்ந்து பாருனு சொன்னா எப்படி முடியும்? அப்படியே அவங்க முயற்சி பண்ணினாக் கூட அந்தப் பல பல பிரச்சினைகள் தான் மறுபடியும் மறுபடியும் மனக் கண் முன்னே வரும்.... பின்னே இறைவனை உணர்றது எப்படி?

பிரம்ம சமாஜிகள் : நீங்க சிறுவயசா இருக்கிறப்பவே கண்ணாடி முன்னாடி விளக்கை ஏத்தி வைச்சு ஜோதி தரிசனம் பண்ணினதாக் கேள்விப்பட்டோம். அப்படிப்பட்ட நீங்களா இப்படிப் பேசுறீங்க.

ராமலிங்கம் : நீங்க ஒன்னைப் புரிஞ்சுக்கனும். பல மாடி வீடு கட்டறதுக்கு முன்னால அங்கே ஒரு சின்ன குடிசையைப் போட்டு அதில தங்கியிருந்துதான் அந்தப் பெரிய கட்டிடத்தைக் கட்ட ஆரம்பிப்பாங்க. பல மாடிக் கட்டிடம் கட்ட சேகரித்திருக்கிற பொருட்களையெல்லாம் அந்தக் குடிசையில் வைச்சுத்தான் கட்டிடம் கட்ட வேனும்.

பிரம்ம சமாஜிகள் : அப்ப முழுமுதற் பொருளை முழுசா உணர்றதுக்கு முதல் பொருளா இந்த உருவ வழிபாட்டை எடுத்துக்கனும்னு சொல்றிங்க அப்படித்தானே...?

ராமலிங்கம் : உண்மைதான். பல பிரச்சினைகளில சிக்கியிருக்கிற மக்கள்கிட்ட போயி பூரணமான மெய்ப் பொருளை நீ உணரனுமுனு நாம சொன்னா, அது எப்படினு கேட்பாங்க. நீ பூரணமான மெய்ப் பொருளை பூரணமா உணரனுமுனா பூரணமான மனநிலையிலே இருந்து பூரணத்தை உணரலாம்னு சொன்னா – இதை முழுசா நீங்க சொல்றதுக்கு முன்னாடியே எந்திரிச்சு போயிடுவாங்க... அப்புறம் எப்படி ஆன்மீகத்தை வளர்க்கிறது...?

பிரம்ம சமாஜிகள் : இப்படி உருவமுள்ள தெய்வங்களை அவங்களுக்கு அறிமுகப்படுத்திட்டீங்கன்னா கடைசி வரைக்கும் அதே நிலையிலேயே இருந்திட்டு அவங்க செத்திட்டா என்ன பலன் விளையும்...?

ராமலிங்கம் : மனிதர்கள் ஒன்னைப் பத்தித் தெரிஞ்சுக்கிட்ட உடனே கொஞ்ச நாளிலேயே அதைவிட மேலான

ஒன்னை தெரிஞ்சுக்க ஆர்வப்படுவாங்க. அது மனித சுபாவம்...

பிரம்ம சமாஜிகள் : எல்லோருக்கும் இந்த ஆர்வம் வராது. பாதிப்பேர் கடைசிவரைக்கும் அப்படியே இருந்திடுவாங்க...

ராமலிங்கம் : சரி, இருக்கட்டும் ஏதோ ஒரு தெய்வத்து மேல நம்பிக்கை வைச்சு தெய்வத்துக்கு பயந்து ஒழுக்கமா இருந்து கடமையைச் செஞ்சு அன்னதானம், நற்பணி அப்படீனு ஈகையான, அறநெறியான காரியங்களில் இறங்கறாங்க இல்லையா? அது பாராட்டுக்குரியது தானே...? அதுவே ஆன்மீக எழுச்சிக்கு முதல்படி தானே...

பிரம்ம சமாஜிகள் : நீங்க தவறாக மக்களுக்கு வழிகாட்டுறீங்கன்னு நினைச்சோம். இப்பத்தான் உண்மை புரியுது...

ராமலிங்கம் : உருவ வழிபாடு இல்லாமல்தான் என்னுடைய இறை உணர்வை வளர்த்துக் கிட்டேன். பின்னாலயும் அந்த நிலைக்குத்தான் செல்லுவேன். கீழே விழுந்து கிடக்கிறவங்களைத் தூக்க நாம் கீழே குனிஞ்சுதான் ஆகணும். அவங்களைத் தூக்கி நிறுத்தறதை விட்டுட்டுப் போயி இவனும் கீழே குனியரானேனு யாரும் நினைச்சா எப்படியோ அப்படித்தான் இதுவும்...

(சிறிது அமைதி)

பிரம்ம சமாஜிகள் : ஐயா, உருவ வழிபாட்டில் தப்பில்லைனு இப்பத்தான் புரிஞ்சுக்கிட்டோம். மக்கள் எல்லாம் நல்ல வழியில, அறநெறியில, பயபக்தியா

நடக்கிறதுக்கு இதைவிட நல்லவழி இல்லைன்னு ஒத்துக்கறோம். அப்ப நாங்க வரட்டுங்களா?

ராமலிங்கம் : (சிரித்துக் கொண்டே) உருவ வழிபாட்டுக்கு வரட்டுமானு சொல்றீங்களா...?

பிரம்ம சமாரிகள் : ஆமாங்க ஐயா. உங்க உருவத்தையே நினைச்சு வழிபடற நிலைக்கு நாங்க வந்திட்டோம் (அனைவரும் சிரிக்கின்றனர்)

## காட்சி - 21

**(கந்தசாமி சோர்ந்து போய் வருகிறார்)**

முத்து : என்னப்பா கந்தசாமி சோர்ந்து போய் வர்றே..?

கந்தசாமி : ரெண்டு நாளா இருமலா இருந்துச்சு... டாக்டர்கிட்ட போய் இருமறதுக்கு ரொம்பவும் கஷ்டமா இருக்குதுனு சொன்னேன். அவர் மருந்து கொடுத்தார்.

முத்து : இப்ப சரியாயிடுச்சா?

கந்தசாமி : இருமறதுக்கு ரொம்ப கஷ்டமா இருக்குதுனு சொன்னேனா இப்ப கஷ்டமில்லாம நல்லாவே இருமறேன்.

முத்து : கொஞ்ச நாளா நீ வைத்தியர் டாக்டர்னு அலைஞ்சுக்கிட்டிருக்கிறியே. என்ன இது உடம்பை நல்லாப் பாத்துக்கப்பா.

கந்தசாமி : உடம்பை நல்லாத்தான், பாத்துக்கிட்டுத்தான் வர்றேன்.

முத்து : என்னத்தைப் பார்த்தாலும் கடைசியில விதினு ஒன்னு இருக்குதில்லை...

கந்தசாமி : உனக்கு ஞாபகம் இருக்குதா...? ஒரு ஆறு மாசத்துக்கு முன்னாடி ராமலிங்கத்தை நாம பார்க்கப் போனப்போ ஒரு சாமியார்... அதுதான் சுந்தரசாமினு பேரு அவர் ராமலிங்கத்துகிட்டே இருந்து விடை பெற்றுப் போன பின்னாடி, அவரைப்பத்தி ராமலிங்கம் சொன்னது ஞாபகம் இருக்கா...?

முத்து : ஆமா, அவரு இன்னும் ஆறு மாசத்துல இறந்துடுவார் விதி அவ்வளவுதான்னு ராமலிங்கம் சொன்னார்.

கந்தசாமி : ஆமா, அவர் நேத்து திடீர்னு இறந்திட்டார்.

முத்து : அப்படியா...! வரப் போறதை அறியறது மட்டுமல்ல வந்ததையும் கூட நம்ம ராமலிங்கம் தீர்த்து வைக்கிறார்.

கந்தசாமி : ஆமாமா! அப்படி நம்ம பாலு ரெட்டியாருக்கு ஏற்பட்ட பெரு நோய்க்கு திருநீறு கொடுத்தார் நோய் தீர்ந்து போச்சு!

முத்து : அதுமட்டுமா? முத்து நாரயண ரெட்டிக்கு ரெண்டு கண்ணும் தெரியாமப் போச்சு. திருநீறு கொடுத்தார் பார்வை வந்திருச்சு. அதுக்காக ராமலிங்கத்துக்கு பெரும் செல்வம் கொடுத்தார். அதை வாங்கிக்காம அந்தச் செல்வத்தை கோவிலுக்கு கொடுக்கச் சொல்லிட்டார் ராமலிங்கம்...

கந்தசாமி : இது தெரியுமா... நம்ம வேதநாயகம் பிள்ளை இரும்பை தங்கமாக்கும்படி இவரைக் கேட்டுக்கிட்டார். அதே மாதிரி இரும்பை தங்கமாக்கிக் காட்டிட்டு, இந்த மாதிரி குறுக்கு வழியில உயரக் கூடாதுனு அறிவுரை சொல்லி அந்தத் தங்கத்தை வீசி எறிஞ்சுட்டார் அது மறுபடியும் இரும்பாயிருச்சு...

முத்து : நீ ஒன்னு... அதே வேதநாயகம் பிள்ளை பசியோட மலை உச்சியில தவிச்சுக்கிட்டிருந்த போது சில லட்டுகளையும் ஒரு செம்பு தண்ணியையும் வர வழைச்சுக் கொடுத்திருக்கிறார் நம்ம ராமலிங்கம்ங்கறது உனக்குத் தெரியுமா...?

கந்தசாமி : அப்படியா! இந்தப் பக்கத்துல லட்டு கிடைக்க மாட்டேங்குது நானும் போய் ராமலிங்கத்துகிட்ட தெய்வீக லட்டு வாங்கிச் சாப்பிடனும்... அப்புறம் நேத்து வாழைத் தோட்டத்துல ஒரு நல்ல பாம்பு இவரைக் கடிச்சிடுச்சு கொஞ்ச நேரத்தில அந்தப் பாம்பு செத்திடுச்சு

முத்து : பாம்புக்கு விதி முடிஞ்சு போச்சு அதுனாலதான் இவரைக் கடிச்சிடுச்சு! எப்படியும் பொதுவுல இவரிடத்தில தெய்வீக சக்தி நடமாடுது...

கந்தசாமி : தெய்வ சக்தினு சொன்ன உடனேதான் ஞாபகம் வருது... கருங்குழி வேங்கட ரெட்டியார் வீட்டில் ராமலிங்கம் தங்கியிருந்து இரவெல்லாம் எழுதிக்கொண்டும் படித்துக்கொண்டும் இருப்பார். இரவில் விளக்கு எரிக்கறதுக்கு தினமும் ராமலிங்கம் பக்கத்துல எண்ணெய்

வெச்சிருவாங்க. ஒரு நாள் மறந்துட்டு வெளியூர் போயிட்டாங்க. இவர் பக்கத்துல இருந்த தண்ணியை ஊத்தி விடிய விடிய விளக்கை எரிச்சிக்கிட்டே எழுதியிருக்கார். காலையிலதான் தெரிஞ்சது அது தண்ணினு.

முத்து : கந்தசாமி, இதைப்பத்தி சொன்னா இன்னைக்கு முழுக்கச் சொல்லிக்கிட்டே இருக்கலாம். தெய்வ சித்துக்கள் இவர்கிட்டே முழுசாக் குவிஞ்சு கிடக்குது. அவர் ஒருத்தரைப் பாத்தாலோ, அவரை மத்தவங்க பாத்தாலோ, பல பிரச்சினைகளைத் தீர்க்குது... வா, இப்ப நாம மறுபடியும் அவரைப் போயிப் பாத்துட்டு வரலாம்.

(இருவரும் போகின்றனர்)

## காட்சி - 22

(ராமலிங்கம் அமர்ந்திருக்கிறார். சிலர் அவரைக் காண வருகிறார்கள்)

வந்தவர்கள் : ஐயா, வணக்கம்! நாங்க வடலூரிலிருந்து வந்திருக்கோம்.

ராமலிங்கம் : வணக்கம்! வாங்க! உட்காருங்க!

வந்தவர்கள் : நீங்க தருமசாலை வடலூரிலே நிறுவப் போறதா அறிஞ்சோம். அது நாலு திசையும் கூடும் இடம். நல்ல சிறப்பான இடம். அதுக்கு நாங்க, எங்க ஊர்க்காரங்கல்லாம் ஒன்னு சேர்ந்து எண்பது காணி நிலம் இலவசமாக கொடுக்கலாமுனு முடிவு எடுத்திருக்கோம்.

ராமலிங்கம் : நன்றி! இப்படி நல்ல காரியங்களுக்கு உள்ளூர்க்காரங்க ஒத்துழைப்பு இருந்தா எல்லோரும் – எப்போதும் – நல்ல காரியத்திலே ஊக்கமா இறங்கிச் செய்வாங்க.

வந்தவர்களுள் ஒருவர்: தினமும் வர்ற ஆயிரக்கணக்கான பேர்களுக்கு உணவளிக்கிறதா திட்டத்தை அறிஞ்சோம். வயிற்றுப் பசியைத் தீர்த்திட்டீங்க. அறிவுப் பசியையும் தீர்க்கணும்.

ராமலிங்கம் : நிச்சயமா அறிவுப் பசியை தீர்க்கறதுக்கு நாற்பது காணி நிலத்துல ஞானசபை ஒன்னு நிறுவணும்னு திட்டம் வைச்சிருக்கேன்...
(வந்தவர்களில் ஒருவர் மீன் பிடிக்கும் தூண்டில் வைத்திருக்கிறார்)
இதென்ன தூண்டில், எதற்கு இது.

வந்தவர்களில் ஒருவர்: இது மீன் பிடிக்கும் தூண்டில் ஐயா.

ராமலிங்கம் : ஐயோ இது என்ன கொடுமை! இது சரியா? நாம் சுவையாகச் சாப்பிட ஒரு உயிரைப் பிடித்துக் கொல்லணுமா? அப்படி நம்ம சதையைப் பெருக்கணுமா?

வந்தவர் : எனக்கு வேற தொழில் தெரியாதுங்களே...

ராமலிங்கம் : உலகத்தில் வாழணும்னு நினைச்சா எத்தனையோ நேர்மையான தொழில்கள் இருக்கு. அந்த தொழில்களில்ல ஏதாச்சும் ஒன்ன செய்ய வேண்டியது தானே!

வந்தவர் : ஐயா நீங்க எல்லா உயிரையும் தன் உயிரை போல நினைக்கிறீங்க. நீங்க சொல்றபடி கடைப்பிடிக்கிறேனுங்க...

(அப்போது பெரிய வெடிச் சத்தம் கேட்கிறது. எல்லோரும் எட்டிப் பார்க்கின்றனர்)

வந்தவர்களில் ஒருவர்: (ஓடிச் சென்று பார்த்துவந்து) ஐயோ ஒரு ஆள் வெடி வெடிச்சு அப்படியே உடம்பெல்லாம் கிழிஞ்சு போய் கிடக்கிறார்.

ராமலிங்கம் : வாங்க நாம போய்ப் பார்ப்போம் (செல்லுகிறார். ஒருநபர் துடித்துக் கொண்டு இருக்கிறார். அப்படியே இறந்து விடுகின்றார்)

வந்தவர்களில் ஒருவர்: ஐயையோ! உயிர் போச்சு! செத்துட்டார்!

ராமலிங்கம் : தள்ளுங்கள்... (இறந்தவர் அருகில் சென்று தடவிக் கொடுத்துவிட்டு) அப்பா எழுந்திரு...! அப்பா எழுந்திரு...!
(இறந்தவர் உடனே எழுகிறார்)

வந்தவர்களில் ஒருவா: அப்பா நீ வெடி வெடிச்சதுல நீ செத்துட்டே... ஐயாதான் உன்னைக் காப்பாத்தினார்.

இறந்து எழுந்தவர் : அப்படியா ஐயா (கீழே விழுந்து வணங்குகிறார், எழுந்து நின்று) எனக்கு நிறைய சொத்து இருக்கு. அதுக்கு வாரிசு இல்லை. அதை உங்களுக்கு கொடுத்திட்டு இனிமே உங்களோடவே இருந்திடறேன்.

ராமலிங்கம் : எனக்கு எதுக்கு சொத்து? வேணுமுனா வடலூர் தருமசாலைக்கு எழுதிவையுங்க. நீங்களும் அங்கேயே தங்கி தொண்டு செய்யலாம்.

றந்து எழுந்தவர் : அப்படியே செய்யுறேனுங்கய்யா... இது என் பாக்கியம்...

வந்தவர்களில் ஒருவர்: ஆரம்பிக்கப் போற ஒரு நல்ல காரியத்துக்கு எப்படியெல்லாம் பணம் குவியுது பாத்தீங்களா?

ராமலிங்கம் : நல்ல காரியமா இருந்தா இறைவனாப் பாத்து நிறைவேத்தி வைப்பார். நல்ல காரியம் செய்ய முயற்சி மட்டும் தான் நாம் செய்யணும்... முடித்து வைக்கிறவர் மேலே இருப்பவர்!

## காட்சி - 23

(முத்து பணத்தை எண்ணிக் கொண்டிருக்கிறார். கந்தசாமி வருகிறார்)

கந்தசாமி : முத்து எனக்கு அவசரமா ரெண்டாயிரம் ரூபாய் வேணும், தரியா?

முத்து : எதுக்கு திடீர்னு ரெண்டாயிரம் ரூபாய்?... என்ன செலவு?

கந்தசாமி : செலவுக்கு இல்லை முத்து, வைரவேல் இருபத்தி ஐயாயிரம் ரூபாய் கடன் கேட்டார். என்கிட்ட இருபத்தி மூவாயிரம் இருக்கு...அதுக்குத்தான்...

முத்து : அடப்பாவி அந்த வைரவேலுக்கு நூறு ரூபாய் கடன் கொடுத்தாலும் திரும்ப கிடைக்காது. நீ போய் இருபத்தி ஐயாயிரம் ரூபாய் கடன் கொடுக்கறியே, இது திரும்ப கிடைக்குமா?

கந்தசாமி : என்னை இளிச்சவாயன்னு நினைச்சுக்கிட்டியா? நான் சுலபமா யாரையும் நம்பிடுவேனா? நானும் அவரை அப்படித்தான் நினைச்சுக்கிட்டு இருந்தேன். ஒருநாள் என்கிட்ட வந்து அஞ்சு ரூபாய் கடன் கேட்டார் அன்னைக்கு சாயங்காலமே வந்து பத்து ரூபாய் கொடுங்க,

*அந்த அஞ்சு ரூபாயை தர்ரேன்னார். அதே மாதிரி நான் பத்து ரூபாய் கொடுத்த உடனே அஞ்சு ரூபாயை நாணயமா கொடுத்திட்டார். பின்னால் இரண்டு நாளில வந்து எனக்கு நூறு ரூபாய் கொடுங்கள் அந்த பத்து ருபாயை தர்ரேன்னார். அதே மாதிரி நூறு ரூபாயை வாங்கிட்டு பத்து ரூபாயை தந்துட்டார். பின்னால் ஒருநாள் ஐந்நூறு ரூபாய் கொடுங்க அந்த நூறு ரூபாயை தர்ரேன்னார். அதே மாதிரி ஐந்நூறு ரூபாய் கொடுத்த உடனே அந்த நூறு ரூபாயை திருப்பிக் கொடுத்திட்டார்.*

*முத்து* : *அப்புறம்? மறுபடியும் ஆயிரம் ரூபாய் வாங்கி அந்த ஐந்நூறு ரூபாயை திருப்பிக் கொடுத்திட்டாராக்கும்..?*

*கந்தசாமி* : *கரெக்ட்! எப்படி சரியாச் சொல்லிட்டே...! நீயும் நாணயஸ்தன் இல்லையா!*

*முத்து* : *நானும் நாணயஸ்தன் தான் ஆனா அந்த மாதிரி கறாரான நாணயஸ்தன் அல்ல...*

*கந்தசாமி* : *என்னப்பா இப்படிக் சொல்ற... நாமே நம்மள குறைச்சு பேசப்படாதப்பா பின்னாடி ஐயாயிரம் ரூபாய் வாங்கி உடனே ஆயிரம் ரூபாயைத் தந்திட்டார்.*

*முத்து* : *பலே! பலே! அப்புறம்*

*கந்தசாமி* : *அப்புறம் ஒரு நாள் பத்தாயிரம் ரூபாய் வாங்கி ஐயாயிரம் ரூபாயை தந்திட்டார். அப்புறம் ஒருநாள் இருபதாயிரம் ரூபாய் வாங்கி அந்த பத்தாயிரம் ரூபாயை திருப்பித் தந்திட்டார்.*

முத்து : இப்ப எவ்வளவு கேக்கறாரு...?

கந்தசாமி : இப்ப அவசரமா இருபத்தையாயிரம் ரூபாய் கேக்கறார் உடனே அந்த இருபதாயிரம் ரூபாயை திருப்பித் தந்திடுவாரு. ஆனால் எங்கிட்ட இருபத்திமூவாயிரம் ரூபாய்தான் இருக்கு அதுக்குத் தான் ரெண்டாயிரம் ரூபாய் பற்றாக்குறையா இருக்கிறதுனால உங்கிட்ட ரெண்டாயிரம் ரூபாய் கேட்கிறேன்.

முத்து : அடக் கேனக்கிறுக்கா... உன் பணம் இருபத்தையாயிரம் ரூபாயும் ஒரேயடியாய் போகப் போகுது. ஜாக்கிரதை !...

கந்தசாமி : நீ யாரையும் சந்தேகக் கண்ணோடேயே பாக்குறே. அவரு இது நாள் வரை ரொம்ப நாணயமா எந்த நோட்டு சாட்டும் இல்லாம வாங்கி. சொன்ன மாதிரியே நாணயமா நடந்துக்கிட்டு வர்றார் இவரை போயி சந்தேகப்படுறியே...?

முத்து : உன்னுடைய இந்த புத்திசாலித் தனத்துக்கே உனக்கு ஒரு டாக்டர் பட்டம் கொடுக்கலாம்.

கந்தசாமி : ஏன் நான் டாக்டர் ஆகக்கூடாதா? நானும் சிறுவயசில எங்கப்பா மாதிரியே டாக்டர் ஆகணும்னு ஆசைப்பட்டேன். முடியலை.

முத்து : என்ன? உங்கப்பா ஒரு டாக்டரா...?

கந்தசாமி : இல்லை எங்கப்பாவும் சிறுவயசில டாக்டர் ஆகணும்னு ஆசைப்பட்டார் முடியலை.

முத்து : உன்னை போட்டோ எடுத்து ஊரெல்லாம் ஒட்டி உன்னைப் போல அறிவாளி ஒருத்தரும் இல்லைனு பறை சாட்டனும்.

கந்தசாமி : உனக்கு ஒரு விபரம் தெரியுமா? ராமலிங்கத்தை யாரும் போட்டோ எடுத்தால் போட்டோவில் படம் கிடைக்கறதில்லையாமே.

முத்து : இவர் பிரணவ தேகம் படைச்சவர். ஸ்தூல தேகம்தான் போட்டோவில விழும் பிரணவ தேகம் போட்டோவில் விழாது.

கந்தசாமி : ராமலிங்கம் மேல கூட பொறாமை கொண்டவங்க இருக்காங்க பாத்தியா..?

முத்து : எதைச் சொல்றே? ராமலிங்கம் பிறக்கறதுக்கு முன்னால ஆன்மீக உணர்ச்சி இல்லாதவங்க கூட இவரால ஆன்மீக எழுச்சி அடைஞ்சாங்களே... அதுனாலயா...?

கந்தசாமி : இல்ல... அதச் சொல்லல, யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் இவருடைய அருட்பாவை யாரும் பிரசுரிக்கும் போது `அருட்பா'னு போடக் கூடாதுனு கோர்ட்ல கேஸ் போட்டு தோத்துப் போனதைத் தான் சொல்றேன்.

முத்து : எந்தக் காலத்திலயும் பொறாமை உள்ளவங்க இருப்பாங்க. அதுனால தானே பெரிய பெரிய சாம்ராஜ்யமெல்லாம் கவிழ்ந்து போச்சு. இதுக்கெல்லாம் காரணம் உளவு சொன்னவனும் உள்ளிருந்தே கவுத்தவனும் பொறாமைக்காரனுங்கதானே... ஆனா அவனுக உள்ளத்துல இருள் அண்டிக்கிடக்கும். ஜோதியே இருக்காது.

கந்தசாமி : ஜோதியினு நீ சொன்னதும் ஞாபகத்துக்கு வருது வடலூர்ல ஏழு திரைகள் போட்டு ஏழு மணி விளக்கங்கள் மிளிர்ரதாச் சொல்றாங்க. ஒரு பெரிய நிலைக் கண்ணாடி. அதுக்கு முன்னால ஒரு விளக்கு. கற்பூர ஜோதி வழிபாடு... அத்தனையும் ஜோதி மயம்னு கேள்விப்பட்டேன்.

முத்து : ஆனா... ரொம்ப வருத்தப்படற சமாச்சாரம் ராமலிங்கம் கொஞ்ச காலமா சீக்கிரம் கடவுளோட ஐக்கியமாகப்போறதாச் சொல்லிக்கிட்டே இருக்காரு.

கந்தசாமி : ராமலிங்கத்தோட சமநோக்கு. சமபாவனை. சமநிலை யாருக்கும் பிடிக்கலை அன்னிக்கு ஒரு நாள் தனியா உட்கார்ந்திருந்தார். நான் போனேன். கைகளை ரெண்டையும் விரிச்சுக்கிட்டு கடை விரித்தேன் கொள்வாரில்லை அப்படின்னார். எனக்கு ரொம்பவும் வருத்தமா இருந்துச்சு.

முத்து : நீ ஏன் வருத்தப்படறே. சந்தோஷப்படுப்பா!

கந்தசாமி : என்ன...? சந்தோஷப்படறதா...?

முத்து : இல்லைப்பா. கடை விரித்தேன் என்னை கொல்லாமலாவது விட்டுட்டாங்களே அப்படீனு சந்தோஷப்பட்டிருப்பார்.

கந்தசாமி : நல்ல ஆளப்பா நீ... வருத்தப்பட்டு அவர் சொன்ன வார்த்தைகள் ஒவ்வொருத்தர் மனசிலும் ஆழமா பதியறதைப் போயி நீ ஜோக் அடிக்கறியே.

முத்து : இல்லை கந்தசாமி 'இடுக்கண் வருங்கால் நகுக' அப்படீனு நீ படிக்கலையா...

கந்தசாமி : ஆமா, ஆமா, அடுத்தவருக்கு இடுக்கன் வரும் போது, நாம மனம்விட்டு சிரிக்கணும் அப்படினு சொல்லியிருக்கிறார்.

முத்து : இப்ப நீ மட்டும் ஜோக் அடிக்கலாமா...?

(இருவரும் சிரிக்கின்றனர்)

## காட்சி - 24

(முத்து வந்து கொண்டேயிருக்கிறார். எதிரே ஒருவர் பின் ஒருவராக இரண்டு பேர் அவரை இடித்துத் தள்ளிவிட்டுச் செல்லுகிறார்கள். மூன்றாவது ஒருவர் வந்து அவரை இடிக்கிறார் முத்து அவரைப் பிடித்துக்கொள்ளுகிறார்)

முத்து : இந்தாய்யா என்னை என்னன்னு நினைச்சுக்கிட்டு இப்படி இடிச்சுத் தள்ளிக்கிட்டு போறே. என்னை குட்டிச்சுவர்னா நினைச்சே...

வந்தவர் : நீ குட்டிச்சுவர்னா... என்னைக் கழுதைனா நினைச்சே...? நாங்க ராமலிங்கசுவாமி மூணுமாசமா மௌனம் இருந்து இன்னைக்குத்தான் பேசப் போறார். அதுக்குதான் போயிட்டிருக்கோம் சரியா ஆறு மணிக்கு அங்க இருக்கணும். அதுதான் வேகமா போயிட்டிருக்கேன்... (ஓடுகிறார்)

முத்து : அப்படியா? இருப்பா இருப்பா நானும்...

(முத்து சொல்வதற்குள் வந்தவர் ஓடி மறைந்து விடுகிறார்)

என்ன இந்த ராமலிங்கம் முழுசா தெய்வ நிலைக்கு மாறிக்கிட்டு வர்றாரு. இவரை

முன்னாடி மாதிரி வெறும் ராமலிங்கம்னு சொல்ல வாய்வர மாட்டேங்குது... ராமலிங்க சுவாமிகள்னு தான் சொல்லத் தோணுது... இதுதான் கடவுள் சக்தியோ... ஒன்னும் புரியலையே! ஒன்னும் புரியாம இருக்கிறதுதான் உயர்ந்த நிலை...ஆமா! ஆமா!

## காட்சி - 25

(ராமலிங்கம் அமர்ந்திருக்கிறார். சிஷ்யர்கள் எதிரே அமர்ந்திருக்கிறார்கள். ராமலிங்கம் பேசத் தொடங்குகிறார்)

ராமலிங்கம் : அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி! தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

எல்லோரும் சொல்லுங்கள்...

எல்லோரும் : அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி! தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

ராமலிங்கம் : ஜோதிமயமான அருள்நிறைந்த இனியவர்களே! நான் கடந்த 3 மாதமாக மௌன நோன்பில் இருந்தேன். மௌனத்தில் இருக்கும் போது பல விசித்திரங்களை உணர்ந்தேன். நாம் பேசாமல் இருக்கும் போது தெய்வம் பேசுகிறது. இப்போது நான் பேசுகிறேன் நீங்கள் அமைதியாக இருப்பதனால் கேட்க முடிகிறது. நீங்களும் பேசிக் கொண்டிருந்தால் என் பேச்சைக் கேட்க முடியாது. அதே போல நீங்கள் பேசாமல் இருக்கும் போது இறைவன் உங்களுக்கு பல ரகசியங்களை சூசகமாக, நேரில் பேசுவதைப் போல் உணர்த்துகிறார். ஆகவே நீங்கள் மாதம்

ஒரு நாளாவது அல்லது மூன்று மாதங்களுக்கு ஒரு நாளாவது மௌன நோன்பு இருக்க வேண்டும். அப்போது ஏழுமலையானும் ஏழுமலைகளையும் தாண்டி உங்களோடு வாசம் செய்வார். அப்போது நீங்கள் வேதாந்த, சித்தாந்த, காலாந்த, யோகாந்த, நாதாந்த, போதாந்தங்களை உணர்வீர்கள் மற்றவர்களிடத்தில் உங்கள் உயிரைப் பார்ப்பீர்கள். உங்களிடத்தில் மற்றவர்கள் தங்கள் உயிரைப் பார்ப்பார்கள். சம நோக்கான சிந்தனையை நாடுவீர்கள் ஞாலத்தை அளப்பீர்கள், உங்கள் காலத்தையும் அளப்பீர்கள்... ஞானத்தை அடைவீர்கள்! மோனத்தைப் பெறுவீர்கள்.

(உட்கார்ந்திருப்பவர்களில் ஒருவர் எழுந்து நிற்கின்றார்)

எழுந்தவர் : ஐயா, காலத்தை அளப்பீர்கள்னு சொல்றீங்க அப்படீனா கொஞ்சம் விளக்கனுமுங்க ஐயா,

ராமலிங்கம் : சந்தேகம் வந்தால் இப்படித்தான் உடனே கேட்க வேண்டும். இப்படிக் கேட்பவர்களை எனக்கு மிகவும் பிடிக்கும். காலத்தை அளப்பீர்கள் என்றால் உங்கள் நிகழ்காலம், எதிர்காலம் என்ன என்று நிச்சயமாக நீங்கள் உணர முடியும் உதாரணமாகச் சொல்ல வேண்டும் என்றால் நான் என் எதிர்காலத்தை நாட்கணக்கில் அளந்து விட்டேன்... ஆமாம்! இன்னும் சில நாட்கள் மட்டுமே நான் உங்களோடு இருப்பேன். ஆன்மீகத்தில் முதிர்ச்சியுற்றால் எதிர்காலத்தை நீங்களும் அளக்கலாம்.

எழுந்தவர் : ஐயா, அப்புறம்...? சில நாட்களுக்கு மட்டும் இருப்பேன்னு சொல்றீங்களே... அப்புறம்...

ராமலிங்கம் : நான் அப்புறம் ஜோதிமயமான கடரோடு ஐக்கியமாகி விடுவேன்... இந்த தேகத்தை நீங்கள் பார்க்க முடியாது அதை அடக்கம் செய்யவும் முடியாது. இது அடங்கப் போவது ஒடுங்கப் போவது இறைவனுக்குள்.

பலர் : ஐயா நீங்கள் இன்னும் பலப்பல ஆண்டுகள் எங்களோடு இருக்கணும்.

ராமலிங்கம் ; பல ஆண்டுகள் என்ன எப்போதும் உங்களோடு தான் இருப்பேன். வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடுகின்றவர்களிடத்திலே தேடிய செல்வம் போல நான் இருப்பேன் ஜோதிமயமாக... எங்கும்! எப்போதும்!

(அப்போது ஒருவர் ஜோதியை ஏற்றுகிறார்)

அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி!
தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

... சொல்லுங்கள் எல்லோரும் சொல்லுங்கள்!

அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி!
தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

எல்லோரும் : அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!
தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

ராமலிங்கம் : (எல்லோரும் சத்தமாகச் சொல்லுங்கள்)
அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!
தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

எல்லோரும் : அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி! தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

## காட்சி - 26

(கந்தசாமி வந்து கொண்டிருக்கிறார்)

கந்தசாமி : முத்து! முத்து! (முத்து வருகிறார்)

முத்து : என்ன கந்தசாமி!

கந்தசாமி : நம்ம ராமலிங்க சுவாமிக்கு என்ன வயசாயிருக்கும்?

முத்து : ஏன் எதுக்கு கேக்கற?

கந்தசாமி : அவர் சித்தி வளாகத்துக்குள்ளே புகுந்து தாளிட்டுக் கிட்டாராம் யாரும் திறக்கக் கூடாதுனு சொல்லிட்டாராம். அதிகாரிகல்லாம் சுத்தி நிறைய கூடி நிக்கிறாங்க அன்பர்களும் நிறைய கூடி நிக்கிறாங்க... இன்னைக்கு திறக்கப் போறாங்க...

முத்து : நீ பயக்கற மாதிரி ஒன்னும் நடக்காது.. கொஞ்ச நாளைக்கு முன்னாடி மூணு மாசம் மௌன நோன்பு இருந்தாரல்லவா அதேமாதிரித் தான் இதுவும் இருக்கும்... திரும்பி வந்துடுவாரு...

கந்தசாமி : இல்ல முத்து சுத்தமா கொஞ்சம் கூட காத்து நுழையாத அளவுக்கு இருக்குதாமல்ல...

முத்து : அப்படியா? வா, போய்ப் பார்க்கலாம். (போகின்றனர்)

அதிகாரி ஒருவர் : (கையில் மெக்கா போனில்) அன்பர்களே! கதவை திறக்கப் போறோம் யாரும் உள்ளே வரக்கூடாது. அதிகாரிகளும் முக்கிய அன்பர்களும் மட்டும்

உள்ளே போவாங்க மத்தவங்க கொஞ்ச நேரம் கழிச்சு போறதுக்கு அனுமதிக்கப்படுவாங்க. (கதவு திறக்கப்படுகிறது. அதிகாரிகளும் முக்கிய அன்பர்களும் உள்ளே போகின்றனர்)

அலுவலர்களில் ஒருவர் : (வெளியில் வந்து) அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி! சுவாமிகள் அறைக்குள் இல்லை. இறைவனோடு பிரணவ தேகியாய் மறைந்து விட்டார்.

அதிகாரிகளில் ஒருவர் : சுவாமிகள் ஜோதிமயமாய் இறைவனின் அருட்சுடரோடு ஐக்கியமாகி விட்டார்! எல்லோரும் அந்த அருட்பெருஞ்சுடரை தரிசனம் செய்யுங்கள்! (ஒரு தட்டில் கற்பூர ஜோதியும் ஒரு விளக்கும் ஏந்தி இருவர் வருகின்றனர்) இந்த ஜோதியில ராமலிங்கசுவாமிகள் இருக்கிறார்...

அன்பர்களில் ஒருவர் : ராமலிங்க சுவாமிகளை தரிசனம் செய்வதும் ஒன்றுதான், அவருடைய சமநிலை கொள்கைகளை பின்பற்றுவதும் ஒன்றுதான், ஆகையினால் எல்லா உயிரையும் தம் உயிர் போல் எண்ணுங்கள். ஏற்றமுடன் வாழுங்கள். மற்ற உயிர்களிடம் உங்களைக் காணுங்கள்... வேற்றுமையை மறந்துவிடுங்கள். அப்போது உங்களிடம் உள்ள தீவிரமும் போய்விடும்... வாதமும் போய்விடும்... ஆகவே தீவிரவாதம் போய் விடும். வாழ்க வளமுடன்! அருட்பெருஞ்ஜோதி! – தீவிரவாதத்தை களைந்தெறிய அருட்பெருஞ் ஜோதி ராமலிங்க சுவாமிகளை பின்பற்றுவது ஒன்றுதான் ஒரே வழி...! ஒழிக தீவிரவாதம்! வாழ்க ராமலிங்க சுவாமிகள்!

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழும் கண்ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே நன்னிதியே
ஞான நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம், வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்
புனைந்துரையேன், பொய் புகலேன் சத்தியமே சொல்கின்றேன்
பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே!

அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி!
தனிப் பெருங்கருணை அருட்பெருஞ் ஜோதி!
அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி!
தனிப் பெருங்கருணை அருட்பெருஞ் ஜோதி!

– ஜோதி ஒளிர்கிறது –

உலகம் செழிக்கின்ற ஒளி தெரிகின்றது!



# ஆன்மிக எழுச்சியும், வள்ளலாரும்



பக்தர் திருப்பாச்சி
அ. ராமகிருஷ்ணன் M.A.

மக்களின் துன்பம் கண்டு துன்பப்பட்டவர்கள் பலர். அவர்களில் வாடிய பயிரைக் கூட கண்டு துன்பப்பட்டவர் ஒருவர். அவர்தான் **வள்ளலார் என்னும் ராமலிங்க சுவாமிகள்.**

சாதாரண நிலையிலே கோவில்களுக்குச் சென்று கோவில்களிலே இருக்கும் மூலவர்களைப் பாடி பக்தியைப் பரப்பி மக்களுக்குள் ஆன்மிக எழுச்சியை ஏற்படுத்தியவர் வள்ளலார்.

புகைவண்டி இஞ்சின் முன்னேறிச் செல்ல செல்ல, பின்னால் உள்ள வண்டிகளையெல்லாம் இழுத்துக் கொண்டே போவது போல, இவர் ஆன்மீகத்திலே படிப்படியாக முன்னேறி எழுச்சி பெற்று இறைவனை ஜோதிமயமாக தரிசிக்கும் நிலை பெற்று மற்றவர்களையும் அந்த நிலைக்கு படிப்படியாக இட்டுச் சென்றார்.

வள்ளலாரின் வாழ்க்கையின் ஒவ்வொரு கோணமும் உலகோர்க்கு பாடமாக அமைகின்றது. அவரின் பேச்சின் ஒவ்வொரு வார்த்தையும் தத்துவ விளக்கங்களாக மிளிர்கின்றன.

இந்த நாடு நம் அகம் எனும் சிந்தனை நம்மனதில் பொலிவேற இந்த நாடகம் உதவட்டும்.

**திருமுருகன் பதிப்பகம்**
**பாலசமுத்திரம், பழனி, தமிழ்நாடு.**